

# YOUNG & OLD MEN & WOMEN



## ALL NEED

## VITAMIN A & D FOR PERFECT HEALTH

சென்னை கவர்ன்மெண்ட் பிராண்டு ஷார்க் லிவர் ஆயிலின் ஒவ்வொரு கிராம் எடையிலும் வைடமின் A-1500 யூனிட்டும், வைடமின் D-100 யூனிட்டும் அடங்கியிருப்பதோடு, இறக்குமதி செய்யப்படும் காட்லிவர் ஆயிலைவிட அதிக வீரியத்தையும் தருகிறது.

உட்கொள்ளும் அளவு:

குழந்தைகள்: அரை முதல் ஒரு டீஸ்பூன்.

முதிர்ந்தவர்கள்: இரண்டு முதல் மூன்று டீஸ்பூன்கள்.

தினந்தோறும் போஜனத்திற்குப் பிறகு இரு முறை பாலுடனோ அல்லது ஆரஞ்சு சாருடனோ உட்கொள்ளலாம்.



அடமின் - ஒவ்வொரு கிராம் எடையிலும் வைடமின் A-12,000 யூனிட்டும், வைடமின் D-1,000 யூனிட்டும் அடங்கிய ஷார்க் லிவர் ஆயிலின் திட ரூபம். இறக்குமதி செய்யப்படும் காட்லிவர் ஆயிலைவிட பதினைந்து முதல் இருபது மடங்கு அதிக வீரிய சக்தியளிக்கிறது. தவறாமல் அடமின் சாப்பிடுவதால் அதிக அளவில் வைடமின் சத்துக்கள் உடலில் சேரும்.

உட்கொள்ளும் அளவு:

குழந்தைகள்: 5 முதல் 10 துளிகள்
முதிர்ந்தவர்கள்: 10 முதல் 15 துளிகள்

தினந்தோறும், போஜனத்திற்குப் பிறகு, மும்முறை பாலுடனோ அல்லது ஆரஞ்சு சாருடனோ, உட்கொள்ளலாம்.

## SHARK LIVER OIL

## Adamin

HIGH POTENCY VITAMIN OIL



GOVERNMENT OIL FACTORY, CALICUT.

ADS.

# DON'T WAIT FOR TROUBLE










# REPLACE YOUR TYRES NOW!

## 100 - க்கு 90 - பங்கு வலுவிழந்த டயர்களினால்தான் 100 - க்கு 90 - பங்கு விபத்துக்கள் விளைகின்றன

தேய்ந்து வலுவிழந்த பிறகும் டயர்களை உபயோகிப்பதனாலேயே விபத்துக்கள் பல ஏற்படுகின்றன.

அபாயம் நேரும்வரை காத்திருக்காதீர்கள்! சகல சீதோஷ்ண நிலைக்கும் ஏற்றவாறு செய்யப்பட்ட குட்இயர் டீலக்ஸ் டயர்களை நம்பிக்கையுடன் வாங்கி பயமின்றி சவாரி செய்து பாதுகாப்பையும் அடையுங்கள். உங்களுடைய டயர்கள் தேய்ந்து போய் பேராபத்தை விளைவிக்கும் நிலைமையை எதிர்பார்த்திருக்க வேண்டாம்.

★ ரஸ்தாவில் சறுக்காது.

★ அதிக மைல்கள் — ஓடும் உழைப்பு.




**GOODYEAR**

*All-weather* **TYRES**

## கவர்ச்சியான ரகங்கள் நவீன (1948) மாடல்கள்




எல்லாம் ஸ்விஸ் தயாரிப்பு — உயர்ந்த லீவர் — 3 வருட உத்தரவாதம்

| (நெ. 1 & 2 (வியுக் டோநு) | | நெ. 3 லேடி ரிஸ்ட் வாட்ச் | | நெ. 4 நட்டை உருவம் | |
|---|---|---|---|---|---|
| க்ரோம் 5 ஜுவல் | ரூ. 40/- | 4 ஜுவல் க்ரோம் | ரூ. 40/- | 4 அல்லது 5 ஜுவல் க்ரோம் | ரூ. 25/- |
| சுபீரியர் 7 ,, | ரூ. 45/- | 7 ,, ,, | ரூ. 55/- | ,, செண்டர் செகண்டு | ரூ. 32/- |
| ரோல்டு கோல்டு | ரூ. 48/- | 7 ரோல்டு கோல்டு | ரூ. 65/- | ,, ரோல்டு கோல்டு | ரூ. 46/- |
| ,, சுபீரியர் | ரூ. 62/- | 15 ஜுவல் க்ரோம் | ரூ. 80/- | 7 ஜுவல் சுபீரியர் | ரூ. 52/- |
| 15 ஜுவல் க்ரோம் | ரூ. 70/- | 15 ரோல்டு கோல்டு | ரூ. 110/- | 15 ,, க்ரோம் | ரூ. 40/- |
| 15 ரோல்டுகோல்டு | ரூ. 80/- | 15 9 காரட் கோல்டு | ரூ. 160/- | 15 ,, ரோல்டு கோல்டு | ரூ. 65/- |

பாக்கிங் தபால் செலவு தனி. ஆர்டர் செய்யும்போது கடிகார நம்பர் குறிப்பிட்டு எழுதவும்.

**H. DAVID CO, Post Box No. 11424, CALCUTTA**

எச். டேவிட் கம்பெனி, தபால் பெட்டி நெ. 11424, கல்கத்தா

---

அந்த இருமலை நிறுத்துங்கள்

# க்ளைகொடின்

## டெர்ப் - வஸாகா

இருமலுக்கு மிக உத்தமமான மருந்து. இது பிரபல டாக்டர்கள் சிபார்சு செய்யும் மருந்து.

Tamil



இது ஒரு அலெம்பிக் தயாரிப்பு

AL 506

அவனுடைய துண்டுகள் இப்பொழுது
எவ்வளவு வெண்மையாகவும்
சுத்தமாகவுமிருக்கின்றன

அது ஸன்லைட்டினால்
தான்!






# ஸன்லைட் சோப்

அடித்துத் துவைக்காமலே துணிகளை
வெண்மையாகச் சலவைசெய்கிறது

S. 97-111 TM




மலர் 8
இதழ் 4

ஆகஸ்டு 22

சர்வதாரி
ஆவணி 7



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.



மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 4

# என்ன செய்தி?

## திறமைக்கு அத்தாட்சி

நமது சர்க்கார் இலாகாக்கள் நன்றாகத் தான் வேலை செய்கின்றன என்பதற்குச் சமீபத்தில் ஒரு நல்ல அத்தாட்சி கிடைத்திருக்கிறது. சென்னைக் கவர்னர் பதவிக்கு அவர் வருவார், இவர் வருவார் என்றெல்லாம் பல பத்திரிகை யூகங்கள் வெளியாயின. அவையெல்லாம் பொய்யாகிக் கடைசியில் உப ராஜப் பிரமுகரான பவநகர் மகாராஜா அடுத்த சென்னைக் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கும் விஷயம் உத்தியோக பூர்வமாக வெளியிடப்பட்டிருக்கிறது. சர்க்கார் அறிக்கை வெளியாவதற்கு முன்னால் பவநகர் மகாராஜா சென்னைக் கவர்னராக வருவார் என்ற ஹேஷ்யம் வெளியாகவே யில்லை. இது விஷயமாகத் தில்லி சர்க்கார் மந்திரிகளும் நமது சென்னை சர்க்கார் மந்திரிகளும் கலந்து ஆலோசித்திருக்க வேண்டும். ஆலோசித்துக் கடிதப் போக்கு வரவுகளும் நடந்த பிறகே நிச்சயப்பட்டிருக்க வேண்டும். எனினும், கடைசி வரையில் செய்தி இரகசியமாக வைக்கப்பட்டிருந்தது என்பது நம்மவர்களின் அரசாங்க நிர்வாகத் திறமைக்கு ஒரு நல்ல அத்தாட்சியாகும்.

## வரவேற்கிறோம்

சென்ற 1947 ஆகஸ்டு மாதம் 15உ இந்தியா சுதந்திர அந்தஸ்தை ஏற்றுக் கொண்டபோது சுமார் அறுநூறு சமஸ்தானங்களும் சட்டப்படி 'சுதந்திரம்' அடைந்துவிட்டன. இத்தனை சமஸ்தானங்களும் தங்களுடைய 'சுதந்திர'த்தை நிலைநாட்டத் தொடங்கியிருக்கும் பட்சத்தில் எங்கும் குழப்பம் ஏற்பட்டுத் தேசம் சின்னாபின்னமாகப் போயிருக்கும். அப்படியொன்றும் நேரிடவில்லை. ஒரே ஒரு விதிவிலக்கைத் தவிர மற்ற எல்லாச் சமஸ்தானங்களும் தங்களுடைய 'சுதந்திர'த்தை விட்டுக் கொடுத்து இந்தியாவோடு சேர்த்து கொண்டன. இந்த மகத்தான நன் முடிவுக்கு சர்தார் வல்லபாயின் திறமை ஒரு பெருங் காரணமாயினும், பொதுவாகச் சுதேச சமஸ்தான மன்னர்கள் தேசத்துக்குத் தங்கள் பொறுப்பை உணர்ந்து நடந்து கொண்டதும் காரணமாகும். பல காலமாகச் சுதேச மன்னர்கள்மீது நாம் கொண்டிருந்த கோபமெல்லாம் திரும்படியாக இந்தச் சந்தர்ப்பத்தில் அவர்கள் நடந்துகொண்டார்கள். இந்தியாவோடு சேர்ந்ததல்லாமல் சமஸ்தானத்திற்குள் தாங்கள் செலுத்தி வந்த யதேச்சாதிகாரங்களை விட்டுக் கொடுத்து ஜனநாயகப் பொறுப்பாட்சியும் ஏற்படுத்த முன் வந்தார்கள்.

தேசத்துக்கு நேர்ந்த மிக நெருக்கடியான ஒரு கட்டத்தில் இவ்விதம் சுதேச மன்னர்கள் துணை புரிந்ததை இந்திய மக்கள் பாராட்ட வேண்டியது அவசியமல்லவா? அந்தப் பாராட்டுதலுக்கு அறிகுறியாகவே பவநகர் மகாராஜாவைச் சென்னைக் கவர்னராக நியமித்திருப்பதாகக் கருதி, அந்த நியமனத்தை வரவேற்கிறோம்.



பவநகர் மகாராஜா சிறந்த அறிவாளி என்றும், விசால நோக்கம் படைத்த குணசாலி என்றும், மது

பானத்தை ஒழித்தவரென்றும் அறிவோம். இந்த விதத்திலும் அவருடைய நியமனம் தமிழ் மக்களுக்குத் திருப்தி யளிக்க வேண்டும்.

## டாக்டர் ஓ. ஆர். பாலு



பிரசித்தமான தேசத் தலைவர் காலமானால் அவருடைய பிரேத ஊர்வலத்தில் ஆயிரக் கணக்கான பொது மக்கள் கலந்துகொண்டு மயானம் வரையில் சென்று மரியாதை செய்வதுண்டு. திருச்சி டாக்டர் ஓ. ஆர். பாலு அரசியல் துறையில் புகழ் பெற்ற தேசத் தலைவர் அல்ல. ஆயினும் அவருடைய உடலத்தை எடுத்துச் சென்றபோது ஆயிரக்கணக்கான திருச்சிப் பொதுமக்கள் தொடர்ந்து சென்றனர். வைத்தியத் தொழில் செய்து இவ்வளவு தூரம் பொதுமக்களின் அபிமானத்தை ஒருவர் கவர்ந்திருந்தார் என்றால் அவர் எத்தகைய சேவை செய்திருக்க வேண்டுமென்று ஊகித்தறியலாம். டாக்டர் ஓ. ஆர். பாலு ஜீவியவந்தரா யிருந்தபோது 'ஏழைகளின் டாக்டர்' என்று பெயர் பெற்றிருந்தார். ஆயிரக்கணக்கான ஏழைகளுக்குத் தர்ம வைத்தியம் செய்தார். அவருடைய நண்பர் குழாம் மிகப் பெரியது. ஒரு முறை அவரைச் சந்தித்துப் பேசியவர்கள், அவரிடம் வைத்தியம் செய்து கொண்டவர்கள், — அனைவரும் அவருடைய சொந்த சிநேகிதர்களாகி விடுவார்கள். அத்தகைய குண நலம் வாய்ந்தவரைப் பாழும் யமன் தயவு தாட்சண்யம் இன்றி நாற்பத்தொன்பதாம் வயதில் கொண்டு போய்விட்டான்! இந்த மாதிரி நேரும் என்று யாரும் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. எதிர்பார்த்திருந்தால், டாக்டர் பாலுவின் நூற்றுக் கணக்கான நண்பர்கள் யமனுடனேயே போர் நடத்தி ஒரு கை பார்க்க முன் வந்திருப்பார்கள். அதற்கிடமின்றி அந்தக் கொடும் யமன் சண்டாள காட்டேரியைப்போல வல்லவா வஞ்சகம் செய்து அவரைக் கொண்டு போய்விட்டான்? யமனை விசாரணைக்குக் கொண்டு வரக்கூடிய கோர்ட்டும் இல்லையே? டாக்டர் பாலுவின் குடும்பத்தாருக்கும் அவருடைய விரிந்து பரந்த நண்பர் கூட்டத்துக்கும் நாம் அநுதாபம் தெரிவிக்கும் நிலைமையில் இல்லை; அவர்களுடன் சேர்ந்து நாமும் துயருறுகிறோம்.

## நமது கவர்னர் ஜெனரல் ராஜாஜி எந்த உடையில் காட்சி அளித்தால் உங்களுக்குத் திருப்தியாக இருக்கும்?



















— *Courtesy : Shankar's Weekly*

# ஜெய் ஹிந்த்!

அமெரிக்காவின் தலைநகரமான நியூ யார்க்கில் பிரம்மாண்டமான சிலையொன்று இருக்கிறது. உலகிலேயே வேறெங்கும் அவ்வளவு உயரமுள்ள சிலை இல்லை. அதுதான் சுதந்திர தேவதையின் சிலை ஆகும். இந்த உலகிலே சுதந்திரத்தைக் காட்டிலும் உயர்ந்தது வேறு ஒன்றுமில்லை என்பதற்கு அந்தச் சிலை ஓர் அறிகுறியாக விளங்குவதுபோல், அதன் கையிலுள்ள தீப் பந்தமும் ஜனங்களின் இருண்ட வாழ்வை, அடிமை வாழ்வை எரிக்கும் அமர தீபமாக விளங்குகிறது!

இருண்ட வாழ்வு அகன்று இந்திய மகாஜனங்கள் சுதந்திரம் பெற்று ஒரு வருஷம் பூர்த்தியாகி விட்டது. மேற்படி வருஷ பூர்த்தி விழாவைப் பம்பாய் நகர மகாஜனங்கள் ஆயிரக் கணக்கான தீப் பந்தங்களுடன் ஊர் வலம் சென்று கொண்டாடினார்கள். இருண்ட வாழ்வை அகற்றும் அமர தீபமே சுதந்திரம் என்பதற்கு அறிகுறியாக அவர்கள் தீப் பந்தங்களுடன் ஊர்வலம் சென்றது எவ்வளவு பொருத்தமானது, பாருங்கள்!

சுதந்திர இந்தியாவின் முதலாவது ஆண்டு பூர்த்தி விழா இந்தியாவிலுள்ள ஆயிரக் கணக்கான நகரங்களிலும் லட்சக் கணக்கான கிராமங்களிலும் வெளிநாடுகளிலும் கூட கொண்டாடப் பட்டது.

இந்தியாவின் தலைநகரமான டில்லியிலே, நமது இணையற்ற தலைவர்கள் அரசாங்க பீடங்களை அலங்கரிக்கும் அந்தப் புனித நகரிலே நடந்த சுதந்திர விழா வைபவங்களில் மூன்று லட்சம் ஜனங்கள் கலந்து கொண்டார்கள். சரித்திரப் பிரசித்தி பெற்ற டில்லி செங்கோட்டையில் இந்திய சர்க்கார் மந்திரிகளும், காரியதரிசிகளும், உயர்தர அதிகாரிகளும், இராணுவ தளபதிகளும், வெளி நாட்டு ஸ்தானிகர்களும் புடைசூழப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு பாரதத் தாயின் மணிக் கொடியைக் கம்பீரமாகப் பறக்க விட்டபோது ஜெய கோஷங்கள் வானளாவின.

அந்த வைபவம் ஆரம்பமாகுமுன், இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முக்கிய காரண புருஷரும் அவதார மூர்த்தியுமான மகாத்மா காந்திக்கு எல்லோரும் மரியாதை செய்தார்கள். ராஜ கட்டத்திலுள்ள அந்த மகானின் சமாதிக்கு கவர்னர் ஜெனரல் ராஜாஜியும் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜியும் இதர மந்திரிகளும் மாலைகள் சூட்டி வணங்கினர்.

தாயின் மணிக்கொடி பறந்து கொண்டிருந்த துவஜ ஸ்தம்ப மேடையில் மகாத்மா காந்தியின் உருவமும் அசோக சக்கரமும், ஜெய் ஹிந்த் மந்திரமும் காட்சி யளித்தன.

கொடியை ஏற்றி வைத்து பண்டித ஜவாஹர்லால் பேசிய பின், இராணுவ தளபதி "ஜெய் ஹிந்த்!" என்று அஷ்டதிக்குகளும் அதிரும்படி கர்ஜித்த போது, இந்திய இராணுவத்தைச் சேர்ந்த வீர சிப்பாய்கள் சகலரும் "ஜெய்" என்று பிரதி கோஷம் செய்தார்கள். நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் இந்தியாவுக்கு அளித்த ஈடில்லாத பொக்கிஷம் போன்ற "ஜெய் ஹிந்த்!" என்ற மந்திரமானது இன்று நமது தலைவர்களின் நாவில் மாத்திர மல்ல, கோடிக்கணக்கான ஜனங்களின் நாவில் மாத்திர மல்ல, ஒளி படைத்த கண்ணும் உறுதி கொண்ட நெஞ்சும் வாய்க்கப் பெற்ற ஒவ்வொரு பாரத வீரரின் நாவிலும் ஒலிக்கின்றது!

* * *

சுதந்திர விழாவை யொட்டி கவர்னர் ஜெனரல் ராஜாஜி தேச மக்களுக்கு விடுத்த செய்தியில், ஒவ்வொருவரும் துவேஷ மனப்பான்மையை விட்டு ஒழிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர். "சுதந்திரம் என்பது ஒரு சந்தர்ப்பமே. சுதந்திரம் பெற்று விட்டால் மாத்திரம் போதாது. பொது வாழ்வில் நேர்மை, ஆக்கவேலைகளை நிறைவேற்றுவதில் இடைவிடா முயற்சி இவற்றின் மூலம்தான் ஒரு தேசம் சுதந்திரத்தின் பலனைப் பெற்றுப் பெருமை அடைய முடியும்" என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார் ராஜாஜி.

செங்கோட்டையில் நடந்த கொடியேற்ற வைபவத்தின் போது பேசிய

பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு, இந்தியாவி லிருந்து வகுப்பு வாத வெறியை,-அது எந்த வேஷத்தில் இருந்தாலும், ஒழித்துக் கட்டவேண்டும் என்று கட்டளை யிட்டார். "நமக்கு விரோதி இந்தியாவுக்கு வெளியே இல்லை, உள்ளேதான் இருக்கிறான். அவன்தான் வகுப்பு வாதம் என்ற அரக்கன்" என்றார் ஜவாஹர்லால்ஜி.

சென்னையிலும் சுதந்திர விழா விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. வீடுகள், கடைகள், காரியாலயங்கள், ரஸ்தாக்கள் முதலியன மணிக்கொடியினாலும் மகர தோரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தன. அன்று கோட்டை மைதானத்தில் சென்னை கவர்னர் ஸர் ஆர்ச்பிபால்டு நை இந்தியாவின் கொடியை ஏற்றி வைத்தார்.

ஹைக்கோர்ட் கட்டிடத்தில் கொடியேற்ற வைபவத்தை நடத்தி வைத்த பிரதம நீதிபதி ஸ்ரீ பி.வி. ராஜமன்னார் "பெற்ற பிள்ளையிடம் காட்டும் அளவற்ற அன்பைக் காட்டிலும் தாயின் மணிக்கொடியிடம் வைக்கும் விசுவாஸமானது மிக மிக உயர்ந்தது" என்று கூறியபோது அங்கிருந்த யாவரும் புளகாங்கிதம் அடைந்து கரகோஷம் செய்தனர்.

மேற்படி விழாவை யொட்டி சென்னையில் நடந்த முக்கிய வைபவங்களுள், சென்ட்ரல் டெலிகிராப் ஆபீஸில் சபாநாயகர் ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் பிள்ளை மகாத்மா காந்தியின் முழு உருவச் சிலையைத் திறந்து வைத்ததும் ஒன்றாகும். மேற்படி ஆபீஸில் காந்தி மகானின் சிலைக்கென்று நிர்மாணிக்கப் பட்டுள்ள பிரத்தியேகமான மண்டபத்தில் அது திறந்து வைக்கப் பட்டது. போஸ்டு மாஸ்டர் ஜெனரல் முதலிய உயர்தர அதிகாரிகள் அதில் கலந்து கொண்டனர்.

அன்று மாலை திருவல்லிக்கேணி திலகர் கட்டத்தில் நடந்த மாபெரும் கூட்டத்தில் பேசிய தலைவர்களும், சுதந்திரத்தின் சத்துருவான வகுப்பு வாதத்தைச் சமுதாயத்தில் தலை காட்டவொட்டாமல் விரட்டி யடிக்க வேண்டிய கடமை ஒவ்வொரு இந்தியரையும் சார்ந்தது என்பதை வற்புறுத்தினர்.

* * *

இந்த வருஷம் கல்கத்தா நகரில் நடந்த வைபவத்தில் சென்ற வருஷத்தைப் போல உற்சாகப் பெருக்கையும் சந்தோஷ ஆரவாரத்தையும் காண முடியவில்லை. சென்ற வருஷம் ஆகஸ்டு மாதம் 15ந் தேதி மகாத்மா காந்தியின் தலைமையில் சுதந்திர விழாவைக் கொண்டாடும் பாக்கியம் கல்கத்தா வாசிகளுக்கே கிடைத்தது. அதற்கு முன் கல்கத்தாவில் நடந்த வகுப்புக் கலகங்களின் கோர விளைவை யெல்லாம் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மறந்து அன்று தான் சகோதரர்கள் போன்று ஒன்று கூடினர். வேற்றுமை யின்றி எல்லோரும் சுதந்திர விழாவில் கலந்து கொண்டார்கள். சென்ற வருஷம் ஆகஸ்டு 14, 15 தேதிகளில் இரவு முழுதும் கல்கத்தா நகரம் தூங்கவேயில்லை. எங்கே பார்த்தாலும் "வந்தேமாதரம்" "ஜெய் ஹிந்த்!" என்ற இரு முழக்கங்களும் காது செவிடுபடச் செய்தன. அது மாத்திரமா? "ஹிந்து முஸ்லிம் ஏக் ஹை" என்ற கோஷமும் அவற்றுடன் சேர்ந்து கொண்டது.

இவ்வருஷம் கல்கத்தாவில் நடைபெற்ற சுதந்திர விழாவில் கலந்து கொண்ட ஒவ்வொருவருடைய முகமும் சென்ற வருஷம் கல்கத்தா ஜனங்களிடையே அத்தகைய அற்புதமான மனமாற்றத்துக்குக் காரண புருஷராக இருந்த காந்தி மகான் எங்கே என்று கேட்பது போலத் தோன்றியது!

* * *

சுதந்திர இந்தியா எதிர்காலத்தில் சுபிட்சமாகவும் பெருமை யுடனும் விளங்க வேண்டும் என்று ட்ருமன், ஆட்லி, ஸ்டாலின், சியாங்கை ஷேக் முதலிய வல்லரசுத் தலைவர்கள் வாழ்த்துச் செய்திகள் அனுப்பினர்.

மற்றும் பல நாடுகளைச் சேர்ந்த சர்க்கார் தலைவர்களும் இந்திய ஜனங்களின் எதிர்காலம் வெற்றிகரமாக இருக்க வேண்டும் என்று ஆசி கூறினார்கள்.

சுதந்திர இந்தியாவின் முதல் வருஷ பூர்த்தி விழா லண்டனிலுள்ள பல இடங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதையொட்டி ஆல்பர்ட் ஹாலில் நடந்த கூட்டத்தில் இந்தியாவின் மாஜி வைஸ்ராய் லார்டு மவுண்ட் பாட்டனும், பிரிட்டிஷ் சர்க்கார் பொக்கிஷ மந்திரியும் இந்திய அரசியல் விஷயமாக பிரிட்டிஷ் சர்க்கார் தயாரித்த திட்டத்துடன் 1942-ம் வருஷம் இந்தியாவுக்கு விஜயம் செய்தவருமான ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸும் பேசினார்கள்.

"பண்டித ஜவாஹர்லால் நேருவைக் காட்டிலும் சிறந்த ஒரு ராஜதந்திரியை



டில்லிமா நகரின் பிரசித்தி பெற்ற செங்கோட்டையின் மீது இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி இரண்டு லட்சம் ஜனங்களுக்கு முன்னால் சுதந்திரக்கொடி ஏற்றிவைத்தார்.

நான் சந்தித்ததில்லை. இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருக்கும் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரோ வெனில் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்; கண்ணியமும் ஒழுக்கமும் வாய்க்கப் பெற்றவர். இந்தியாவின் தற்போதைய தலைவர்கள் இந்தியா எதிர்காலத்தில் பெருமையுடன் விளங்குவதற்குற்ற முறையிலேயே அத் தேசத்தை நிர்வகித்து வருகிறார்கள் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை" என்று லார்டு மவுண்ட் பாட்டன் இந்தியத் தலைவர்களை ஹ்ருதய பூர்வமாகப் பாராட்டிப் பேசினார்.

அதற்குப் பிறகு பேசிய ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ், இந்தியாவின் சுதந்திரம் எக்காலத்திலும் அசைக்க முடியாதபடி ஸ்தாபிக்கப் பெற்றுவிட்டது என்று குறிப்பிட்டார்.

"காலப் போக்கை அறியாத பிற்போக்காளர்களான ஒரு சில சாம்ராஜ்ய வெறியர்கள் இன்னும்கூட பிரிட்டனில் இருக்கின்றனர்.

"அதுபோலவே, இந்தியாவிலும் உண்மை நிலைமையை உணர்ந்து கொள்ளும் ஆற்றல் அற்ற சில பயங்கொள்ளிகள் இருக்கிறார்கள். மீண்டும் ஒருவேளை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஆதிக்கம் இந்தியாவில் ஏற்பட்டு விடுமோ என்பது அத்தகையோர்களின் பீதி.

"இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்தது அளித்ததுதான். இனி அதிலிருந்து பிரிட்டன் பின்வாங்கப் போவதில்லை. இந்தியாவின் சுதந்திரம் பரிபூரணமானது. ஆட்சேபிக்க முடியாதது. எக்காலத்தும் அசைக்க முடியாதது. பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையே முற்றிலும் சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட புதிய, சந்தோஷகரமான உறவு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது."

ஸர் கிரிப்ஸ் மேற்கூறிய விதம் எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமின்றி பிரிட்டனின் நிலைமையைத் தெளிவுபடுத்தினார்.

இவ்வாறாக உலகம் முழுதும் இந்தியாவுக்கு ஆசி கூறியிருக்கிறது.

ஜனித்த உடனேயே பல்வேறு மகத்தான சோதனைகளுக்கும், கண்டங்களுக்கும் உள்ளான இந்திய சுதந்திரக் குழந்தைக்கு ஒரு வயது பூர்த்தியாகி இரண்டாவது வயது ஆரம்பமாகியிருக்கிறது. இனியும் அந்தக் குழந்தை பெரும் சோதனைகளுக்கு உட்படாமலிருக்கவும், அதன் வளர்ச்சி தடைப்படாமல் இருக்கவும் உலக மக்களின் ஆசியும் இந்திய ஜனங்களின் ஏகோபித்த ஒத்துழைப்புடன் கூடிய பிரார்த்தனையும் உதவி புரியுமாக!

# தமிழர் உயர்வே! வருக!

சென்னை மாகாணத்தின் மாஜி கவர்னர் எர்ஸ்கின் சொல்கிறார்:— "நான் சென்னை கவர்னராயிருந்தபோது இரண்டு வருஷம் ராஜாஜி பிரதம மந்திரியாயிருந்தார். அந்தக் காலத்தில் நாங்கள் அடிக்கடி சந்தித்துப் பல விஷயங்களைப் பற்றிக் கலந்து யோசிக்கவேண்டியிருந்தது. இந்த விவாதங்களினால் ராஜாஜி ஏதேனும் பயன் அடைந்தாரா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நான் அளவற்ற பயன் அடைந்தேன் என்பது நிச்சயம்."

பண்டித ஜவாஹர்லால் கூறினார்:— "ஒரு விஷயத்தைப் பற்றி நான் யாரோடாவது கலந்து யோசிக்க வேண்டியிருந்தால் ராஜாஜியுடன் கலந்து யோசிக்கவே அதிகமாக விரும்புவேன். அநேகமாக அவருடைய முடிவுகளை ஒப்புக்கொள்வேன். முடிவுகளை ஒப்புக்கொள்ள முடியாமற் போனாலும் அவருடன் விவாதிப்பதால் நான் பெரு நன்மை அடைவது நிச்சயம்."

லார்ட் மவுண்ட் பேட்டன் பலமுறையும் "இந்தியாவில் மிகச் சிறந்த இராஜ தந்திரி ராஜாஜி; ஒழுக்கத்திலும் உறுதியிலும் தீரத்திலும் இணையற்றவர்" என்று சொல்லியிருக்கிறார். இந்தச் சுதந்திர தினத்தின்போதும் அவ்விதம் கூறினார்.

நம்முடைய ராஜாஜியின் பெருமையை நாம் அறிவதற்கு இம்மாதிரி பிறருடைய அத்தாட்சி வேண்டியதில்லை. ஆயினும் நம்முடைய மனதில் உள்ளதையே பிறர் யாராவது சொன்னால் ஒரு தனி மகிழ்ச்சி உண்டாகத்தான் செய்கிறது.

* * *

பாகிஸ்தான் கோரிக்கையைப் போல் இந்தியப் பொதுமக்களின் வெறுப்புக்குப் பாத்திரமான கோரிக்கை உலகத்திலேயே வேறு இருந்தது கிடையாது. அத்தகைய கோரிக்கையைச் சில முக்கிய நிபந்தனைகளுடன் ராஜாஜி ஒரு காலத்தில் ஆதரித்தார்.

1942 ஆகஸ்டு புரட்சி இயக்கத்தை எதிர்த்ததைப் போல் ஒருவர் தமது அரசியல் வாழ்வுக்கு இறுதி தேடிக்கொள்ள வேறு எதுவும் செய்திருக்க முடியாது. ஆயினும் ராஜாஜி முக்கிய காரணங்களைக் கொண்டு அந்த இயக்கத்தின் சில அம்சங்களை எதிர்த்தார்.

யுத்தத்தில் மிகப் பெரும்பாலோர் ஜெர்மனியும் ஜப்பானும் ஜயித்துவிடும் என்று எண்ணிக் கொண்டிருந்த போது ராஜாஜி 'பிரிட்டிஷார் தான் ஜயிப்பார்கள்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

இப்படியெல்லாம் அரசியல் நீரோட்டத்தை எதிர்த்து நீந்திக் கொண்டிருந்தவர் இன்றைக்குக் காங்கிரஸ் தலைவர்களின் வேண்டுகோளின் பேரில் இந்தியாவின் கவர்னர்-ஜெனரல் பதவியில் இருக்கிறார்.

ராஜாஜிக்கு முன்னால் எந்த இந்தியரும் கவர்னர்-ஜெனரலாயிருந்ததில்லை; இனிமேலும் இருக்கப் போவதில்லை.

அன்றைக்குத் தேச மக்களின் அதிருப்திக்கும் தேசத் தலைவர்களின் வெறுப்புக்கும் அவ்வளவு தூரம் ஆளானவர் இன்று இத்தகைய உன்னத நிலையில் இருப்பதின் காரணம் என்ன?

மாசற்ற ஒழுக்கமும், தூய இதயமும், சத்தியத்தில் உறுதியும் அறிவுத் திறமையும் தன்னல உணர்வே இல்லாத பொதுநலப் பற்றுமே காரணங்களாகும்.

இத்தகைய ஒப்பற்ற குணாதிசயங்களினால் ராஜாஜி தமிழருக்கும் தமிழ் நாட்டுக்கும் என்றுமில்லாத உயர்வை அளித்திருக்கிறார். கரிகால சோழனும் இராஜேந்திர சோழனும் ஆயுதப் படை பலத்தினால் வட இந்தியாவில் தமிழர் கொடியை உயர்த்தினார்கள். ராஜாஜியோ அன்பின் பலத்தினாலும் அறிவின் பலத்தினாலும் தியாக சக்தியினாலும் வடநாட்டில் தமிழர் மேன்மை வானுற ஓங்கி விளங்குமாறு செய்திருக்கிறார். நாளைய தினம் சென்னைமா நகருக்கு விஜயம் செய்யும் கவர்னர்-ஜெனரல் ராஜாஜியை எல்லாத் தமிழ் மக்களோடும் சேர்ந்து "தமிழரின் உயர்வே! வருக!" என்று கோஷித்து வரவேற்கிறோம்.



# உபயகுசலோபரி



நேயர்களுக்கு வணக்கம். சுதந்திரத் திருநாள் கொண்டாடினீர்களா? கொண்டாட்டத்தில் களைப்பு நீங்கிவிட்டதா? மிகக் குதூகலமாகக் கொண்டாடப் படத்தக் காந்தி மகாத்மாவின் பிரிவு இடங்கொடுக்க வில்லை தான்; ஆயினும் ஓரளவு உற்சாகத்துடனே யாவது கொண்டாடித்தான் இருப்பீர்கள்.

• • •

"கல்கி" சுதந்திர மலர் பற்றிய நேயர்களின் வாழ்த்துக்களை யெல்லாம் தலை வணங்கி ஏற்றுக் கொண்டு நன்றி செலுத்துகிறேன். ஆம்; "கல்கி" சுதந்திர மலர் நாம் எதிர்பார்த்ததைக் காட்டிலுங்கூடப் பிரமாதமாகத்தான் அமைந்து விட்டது.

இட நெருக்கடி காரணமாக அட்டைப்பட விளக்கம் நின்று போயிற்று. ஆனாலும் விளக்கம் அவசியம் இல்லை என்பது நேயர்களின் கடிதங்களி லிருந்து தெரிகிறது. தாயின் மணிக்கொடி வானில் உயர்ந்து பறப்பதையும், கொடிக்கம்பத்தின் கீழ் கையில் வேல் பிடித்த வீரர்கள் நிற்பதையும் அட்டைப் படத்தில் பார்த்துவிட்டு,

"நம்பற்குரியர் அவ்வீரர்—தங்கள்
நல்லுயிரீந்தும் கொடியினைக் காப்பார்!"

என்ற பாரதியார் வாக்கை அவ்வீரர்களின் தோற்றம் பிரதிபலிப்பதாக ஒரு அன்பர் கூறியிருக்கிறார். வடக்கே, கிழக்கே, மேற்கே மூன்று திக்கையும் நோக்கி நிற்கும் அவ்வீரர்களை இன்னொரு முறை பாருங்கள்! என்ன கம்பீரம்! என்ன தீரம்! என்ன உறுதி!

தெற்கேயிருந்து அபாயம் இல்லையாகையால் தென் திசை நோக்கும் வீரனும் இல்லை.

பின்னர், கோபுரத்துக்கும் மேலே உயரும் தெய்விக ஆகிருதியுடன் முகத்தில் கருணையும் அன்பும் ததும்பும் பாரதத் தாயின் திருமுகத்தைப் பாருங்கள். ஆம்! கருணை வடிவானவள்தான் பாரதத்தாய். எனினும்,

"செறுவது நாடி வருபவரைத்—துகள்
செய்து கிடத்துவள் தாய்!"

என்பதற்கோர் அடையாளமாகக் கையில் வெற்றிவேல் பிடித்துக் கொண்டு நிற்கிறாள்.

• • •

"கல்கி" சுதந்திர மலரில் மிக முக்கியமான அம்சம் எது என்று நேயர்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. அது கவர்னர்-ஜெனரல் ராஜாஜி அவர்களின் சிறு கதைதான்.

புது டில்லியில் ஆசியாவிலேயே மிகப்பெரிய மாளிகையில் வசித்தாலும் ராஜாஜியின் மனம் தமிழ்நாட்டுக் கிராமத்திலுள்ள ஏழை மனிதனிடம் நிலைத்து நிற்கிறது என்பது அக்கதையிலிருந்து தெளிவாகிறது. சுதந்திர இந்தியாவில் மக்களும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதையும் குறிப்பாக அக்கதை விளக்குகிறது.

எவ்வளவு பெரிய ஒப்பில்லா உன்னதம் வாய்ந்த ஸ்தானத்தை வகித்தாலும் தமிழையும் தமிழர்களையும் மறந்து விடவில்லை ராஜாஜி என்பதற்கும் "பிள்ளையார் காப்பாற்றினார்" என்ற கதையே அத்தாட்சி. வேறு யாரும் இவ்விதம் கிராமாந்தரத்து ஏழை மக்களின் சுக துக்கங்களை விளக்கும் கதையை இவ்வளவு அனுதாபத்துடனும் கலைப் பண்புடனும் எழுதியிருக்க முடியாது. இடைவிடாத எத்தனையோ பொறுப்பு வாய்ந்த அலுவல்களுக்கு இடையில் இந்தத் தமிழ்க் கதையை எப்படி எழுத முடிந்தது என்பது ஆச்சரியம் உண்டாக்கும் விஷயந்தான்.

• • •

மற்றப்படி "கல்கி" சுதந்திர மலரில் வெளியாகியிருக்கும் அருமையான விஷயங்களைப் போல் இந்தியாவிலேயே வேறு எந்தப் பத்திரிகையின் சுதந்திர மலரிலும் வரவில்லை யென்று சில நேயர்கள் பாராட்டி மகிழ்ந்திருக்கிறார்கள். இருக்கலாம்; ராஜாஜி பிறந்து வளர்ந்த தமிழ் மாகாணத்தில் வெளியாகும் தமிழ் மக்களின் சொந்தப் பத்திரிகைக்கே அந்தக் கௌரவம் கிடைக்க வேண்டும் என்று மற்றப் பத்திரிகைக்காரர்கள் நினைத்திருக்கலா மல்லவா?

இந்தியாவின் பழைய மகா சாம்ராஜ்யங்களையும், ராணா பிரதாப் சிங் முதல் பிரிகேடியர் உஸ்மான் வரையில் இந்திய சுதந்திரத்துக்காகப் போரிட்ட வீரர்களையும், அயல் நாடுகளில் சுதந்திரத்துக்காக மகா தியாகம் செய்த வீரர்களையும் பற்றிய கட்டுரைகள் வெளி விட்டதை நேயர்கள் அனைவரும் ஏகமனதாகப் பாராட்டியிருக்கிறார்கள்.



எட்டுப் பக்க வர்ணப் படங்களிலே நமது சித்திரக்காரர்கள் பாரத தேசத்தின் பழைய மகோந்நதத்தைச் சித்திரித்திருப்பது எல்லாருடைய மனதையும் கவர்ந்திருக்கிறது.

நல்லது; இம்மாதிரி நேயர்களின் ஏகமனதான பாராட்டுதல்களைப் பெறும் பல சந்தர்ப்பங்கள் வருங்காலத்தில் கிடைக்கும் என்ற ஆசையோடிருக்கிறோம். நாம் இந்தக் "கல்கி" பத்திரிகையை நடத்துவதுதான் வேறு எதற்காக? ஜெய் ஹிந்த்! வந்தேமாதரம்!

# பாரதி விழா

பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில், பாரதியார் ஞாபகார்த்த மண்டபத்தில் செப்டம்பர் 11உ பாரதி விழாவைக் கொண்டாடுவதென்று தீர்மானித்திருக்கிறது. பாரதியார் பெருமையைப் பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்களுக்கு உணர்த்திய **பேராசிரியர் வ. ரா.** அவர்கள் விழாவுக்குத் தலைமை வகிப்பார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

அன்றைய தினத்தில் பாரதியார் மண்டபத்தில் புத்தகசாலை ஒன்று திறந்து வைக்கப்படும். கனம் புனராமத்து இலாகா மந்திரி **ஸ்ரீ எம். பக்தவத்சலம்** அவர்கள் பாரதி மண்டபப் புத்தகசாலையைத் திறந்துவைக்க இசைந்திருக்கிறார்கள்.

பாரதி மண்டப புத்தகசாலையில் வைப்பதற்கு 18—7—48 "கல்கி" இதழில் வெளியான விண்ணப்பத்தை யொட்டிப் புத்தக தானம் செய்ய விரும்பும் அன்பர்கள் தயவு செய்து அந்த உத்தம கைங்கரியத்தைச் செய்ய விரையுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

மேற்படி விண்ணப்பத்துக் கிணங்க இதுவரை அன்பர்களிடமிருந்து சுமார் ஆயிரம் புத்தகங்கள் வந்திருக்கின்றன. ஆனால் இது போதாது; பாரதி அன்பர்களிடமிருந்து இன்னும் குறைந்த பட்சம் 4000 புத்தகங்களை எதிர்பார்க்கிறோம். புத்தகங்களைக் "கல்கி" காரியாலயத்துக்கு ரயில் பார்ஸலில் அனுப்பிக் "கல்கி" ஆசிரியருக்குத் தகவல் தெரிவிக்குமாறு கோருகிறோம்.



சென்னை மாகாணத்திலும் முக்கியமாகத் திருநெல்வேலி ஜில்லாவிலும் இந்த வருஷத்தில் இன்னமும் நிலவியிருக்கும் உணவுப் பொருள் நெருக்கடியை முன்னிட்டு எட்டயபுரத்தில் பாரதியார் விழாவை இம்முறை அடக்கமாக நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இந்திய சுதந்திரத்தின் பிதாவான காந்தி மகாத்மா நம்மை விட்டுப் பிரிந்து இன்னும் ஒரு வருஷம் ஆகவில்லை யென்பதையும் உத்தேசித்து இந்த வருஷத்து விழாவில் சங்கீதக் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்யப்படவில்லை.



மகாகவி பாரதியாரின் புனித ஞாபகத்தைச் செப்டம்பர் 11உ யன்று பல முறையிலும் தமிழ் மக்கள் கொண்டாடுவார்கள். நாமும் ஒரு வழி குறிப்பிட விரும்புகிறோம்.

"பாரதி நினைவு மலர்" என்ற அருமையான புத்தகம் ஒன்று இருக்கிறது. பாரதி பாடல்கள் இவ்வளவு அழகான முறையில் இதுவரை அச்சிடப்பட்டது கிடையாது. பாடல்களின் கருத்துக்களைச் சித்திரிக்கும் அற்புதமான வர்ணப்படங்கள் புத்தகத்தில் நிறைந்திருக்கின்றன. ஒரு பிரதி வாங்கி வீட்டில் வைத்தால் குழந்தைகளுக்குப் பாரதியாரிடம் பக்தியும் தமிழ் அன்பும் சித்திரக் கலையில் அளவிலா ஆர்வமும் ஏற்பட்டு வளர்ந்தே தீரும். விலை ரூபாய் மூன்றுதான். இதன் விற்பனையில் வரும் லாபம் எல்லாம் எட்டயபுரம் பாரதி விழாச் செலவுக்கென்று அளிக்கப்படும். "பாரதி நினைவு மலர்" பெற விரும்பும் அன்பர்கள் **மானேஜர், "கல்கி", கீழ்ப்பாக்கம்** என்ற விலாசத்துக்கு எழுதவேண்டும்.



## சுதந்திரத் திருநாள்

சென்னைக்கருகில் உள்ள ஆவடி ராணுவ என்ஜினியரிங் ஸ்தாபனத்தில் டாக்டர் சுப்பராயன் அவர்களைக் கொண்டு சுதந்திரக் கொடியை உயர்த்தி, தியாகிகளின் ஞாபகச் சின்னத்துக்குப் பூச்செண்டு அணிவித்து, உற்சாகமாகப் பொதுக்கூட்டம் நடத்திச் சுதந்திரத் திருநாள் கொண்டாடினார்கள்.











புரசவாக்கம் அன்னதான சமாஜத்தில், அன்னமிடும் மணிக் கையினும் தாயின் மணிக்கொடி உயர்த்தப்பட்டது. (கொடி உயர்த்துகிறவர் கனம் பக்தவத்ஸலம் அவர்களின் குமாரி ஸ்ரீமதி சரோஜினி; பக்கபலமாக நிற்பவர் ஸ்ரீமதி ரகுராஜ பாரதி.)



திருவல்லிக்கேணி தேசிய பெண் பாடசாலையின் குழந்தைகள் சுமார் ஆயிரம்பேர், அழகாக ஸுவர்ணப் பூச்செண்டு சுற்றிய கொடி மரத்தில் வெற்றிக் கொடியைப் பறக்கவிட்டு, நாட்டையும் நாட்டின் சுதந்திரத்தையும் பற்றிப் பல்லாண்டு பாடி, ஆனந்தமாகச் சுதந்திரத் திருநாள் கொண்டாடுகிறார்கள்.




# பேராசிரியர் மணிவிழா

தமிழ் நாட்டைத் தட்டி எழுப்பினர் பாரதியார்; சில சமயம் அதட்டியும் எழுப்பினர். அந்தத் தேசிய மகா கவிக்குத் தமிழ் மக்கள் அவர் பிறந்த எட்டயபுரத்தில் ஒரு சிறந்த ஞாபகச் சின்ன மண்டபம் எழுப்பினர்கள். திறப்பு விழாவும் கோலாகலமாய் நடத்தினர்கள். ஒரு லட்சம் தமிழ் மக்கள் விஜயம் செய்து நடத்தினர்கள்.

இந்த முயற்சியைப் பற்றிச் சிலர் குறை கூறவும் செய்தார்கள். "உயிர் வாழும்போது பாரதியாரைக் கவனியாதிருந்து விட்டு, சாப்பாட்டுக்கே கஷ்டப்படும்படி விட்டு விட்டு, இப்போது மணிமண்டபம் கட்டுகிறார்களே?" என்றார்கள். உண்மைதான். பாரதியார் உயிரோடிருக்கும்போது அவருக்கு ராஜோபசாரம் செய்திருக்க வேண்டும். வறுமையின் கொடுமை அவரை அண்டாதிருக்கும்படி செய்திருக்க வேண்டும். ஆனால் அந்தக் காலத்துத் தமிழர்கள் அந்தக் கடமையில் தவறிவிட்டார்கள். அதற்குப் பிராயச்சித்தமாக இந்தக் காலத்துத் தமிழ் சந்ததிகள் பாரதியார் பிறந்த ஊரில் மணி மண்டபம் கட்டி அவருடைய ஞாபகத்தைச் சிறப்பித்தார்கள்.

அத்துடன் விட்டு விட்டார்களா? இல்லை. தமிழ் நாட்டின் அதிர்ஷ்டவசமாக நம்மிடையே வாழ்ந்திருக்கும் காந்தியக் கவி ராமலிங்கம் பிள்ளைக்குப் பணமுடிப்பு அளித்துக் கௌரவித்தார்கள். இது மிகவும் உத்தமமான காரியம் அல்லவா? ஆதலின் யாரும் குறை கூறத் துணியவில்லை.

இந்த வருஷத்தில் தமிழ் வசன ஆசிரியர்களில் தலைசிறந்தவரும், முதல் எழுத்தாளரும், பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்களுக்குப் பாரதியாரை அறிமுகப்படுத்தியவரும், தேச பக்தரும், சிறை சென்ற தியாகியுமான ஸ்ரீ வ. ரா. அவர்களுக்கு அறுபதாவது பிறந்த தினத்தில் மணி விழாக் கொண்டாட முன் வந்திருக்கிறார்கள். இதற்காகத் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜ நாடாரைத் தலைவராகவும், சென்னை மாகாணத்துப் பிரபல பத்திரிகாசிரியர்களை அங்கத்தினராகவும் கொண்ட கமிட்டி ஏற்பட்டிருக்கிறது. மணிவிழா செப்டம்பர் மீ 17உ சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெறுகிறது. மணி விழாச் சந்தர்ப்பத்தையொட்டி ஸ்ரீ வ. ரா. அவர்களுக்கு நிதி முடிப்பு அளிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அறுபது வயதான தேசபக்தருக்கு, முப்பது ஆண்டு காலமாகத் தமிழ் வளர்க்கும் தொண்டில் ஈடுபட்டிருந்த எழுத்தாளர் தலைவருக்கு, இனியாவது ஜீவனத்தைப் பற்றிய கவலை வைக்கக் கூடாது என்பதற்காகத்தான் நிதி முடிப்பு அளிக்கப்படுகிறது.

எழுத்தாளர் உலகில் ஸ்ரீ வ. ரா. எவ்வளவு உன்னத ஸ்தானத்தை வகிக்கிறார் என்பதை ஒரு விஷயத்தைக் கொண்டு நன்கறியலாம். சென்னையிலுள்ள பிரபல பத்திரிகாசிரியர்கள் எல்லோரும், "ஹிந்து" "சுதேசமித்திரன்" "தினமணி" "தினசரி" "பாரத தேவி" "தினத் தந்தி" "ஆனந்த விகடன்" "கலைமகள்" பத்திரிகைகளின் ஆசிரியர்கள்—வ. ரா. நிதிக்குத் தலைக்கு ஐந்நூறு ரூபாய் நன்கொடை அளிக்க முன் வந்திருக்கிறார்கள்.

பத்திரிகைகள் சாதாரணமாக ஒரு விஷயத்தைப் பற்றி ஒரே அபிப்பிராயம் கொள்வது அருமை. ஸ்ரீ வ. ரா. விஷயத்திலோ அனைவரும் ஒற்றுமைப் பட்டிருக்கிறார்கள்.

தமிழ் நாட்டுப் பத்திரிகாசிரியர்களால் ஒருமுகமாக ஆரம்பிக்கப்பட்டிருக்கும் காரியத்தைத் தமிழ் மக்கள் பூர்த்தி செய்து வைக்க வேண்டுமென்று கோருகிறோம்.

# அலை ஓசை

## கல்கி

### ஆறாம் அத்தியாயம்

## பாதிக் கலியாணம்

"வெள்ளைக்காரன் ரொம்ப கெட்டிக்காரன் என்றல்லவா இத்தனை காலும் எண்ணிக் கொண்டிருந்தேன்? இங்கிலீஷ்காரன் கிட்டேயும் அசட்டுத்தனம் இருக்கிறது! இல்லாவிட்டால் எங்கே பார்த்தாலும் பாழுங் கோட்டையும், மயானமும், பகுதியுமா யிருக்கும் இந்த ஊருக்குத் தலை நகரத்தைக் கொண்டு வருவானா? சவனே என்று கல்கத்தாவிலேயே இருக்கக் கூடாதோ?"—இவ்விதம் டில்லியைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து வீட்டுக்குள் பிரவேசிக்கும்போது காமாட்சி அம்மாள் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தாள்.

"என்ன, அம்மா, இப்படிச் சொல்கிறீர்களே? செங்கோட்டையிலே பார்த்தோமே ஷாஜஹானின் அரண்மனை? அது ஒன்று போதாதா? என்ன அழகு! என்ன அழகு! இந்த டில்லி அரண்மனையே இவ்வளவு அழகாயிருக்கிறதே! இன்னும் ஆக்ரா அரண்மனையும் தாஜ்மகாலும் எப்படியிருக்குமோ?" என்றாள் சீதா.

"எனக்கு மோத்தார் கார் வேண்டாம்! தோங்கா வண்டிதான் வேணும். சூரியா மாமா! என்னை நேத்திக்குத் தோங்காவிலே ஏத்திண்டு போறயா?" என்றாள் வசந்தி.

"ஆகட்டும், வசந்தி! உன்னை டோங்கா வண்டியில் நேற்றைக்கும் ஏற்றிக் கொண்டு போகிறேன்; நாளைக்கும் ஏற்றிக்கொண்டு போகிறேன்!" என்றான் சூரியா.

எல்லாரும் வீட்டுக்குள் பிரவேசித்து ஹாலில் போட்டிருந்த சோபாக்களில் உட்கார்ந்தார்கள்.

"இங்கிலீஷ்காரன்தான் ஏதோ தெரியாத்தனமாய் டில்லிக்கு வந்துவிட்டான். இங்கிலீஷ்காரனை விரட்டியடித்து விட்டுச் சுயராஜ்யம் ஆள வேண்டும் என்று சொல்லும் நம்ம சூரியா கூட இந்த ஊருக்கே வந்து சேர்ந்திருக்கிறானே, அம்மா! இந்த வேடிக்கைக்கு என்ன சொல்லுகிறது?" என்றான் ராகவன்.

"இங்கிலீஷ்காரனை விரட்டுகிறதற்கு வேறு எங்கே போகிறது? அவன் இருக்கிற இடத்துக்குத்தானே வரவேண்டும்?" என்று சூரியா கேட்டான்.

"அப்படியென்றால் நீ அதற்காகத்தான் டில்லிக்கு வந்திருக்கிறாய் என்று சொல்லு; இங்கிலீஷ்காரனை விரட்டியடிக்கப் போவது நிச்சயந்தானாக்கும்!" என்றான் ராகவன்.

"நாம்தான் இன்றைக்குப் பார்த்து விட்டு வந்தோமே; கோரி முகம்மது காலத்திலிருந்து எத்தனை ராஜ்யங்கள் இந்த டில்லியில் இருந்திருக்கின்றன? அவையெல்லாம் போனதுபோல் இங்கிலீஷ் ராஜ்யமும் போக வேண்டியதுதானே? இங்கிலீஷ்காரன் மட்டும் இங்கே சாசுவதமாயிருக்கப்போகிறானா?" என்றான் சூரியா.

"யார் கண்டது? இந்தப் பாழடைந்த பட்டணத்திலேதான் இருக்க

வேண்டும் என்பது இங்கிலீஷ்காரனுடைய தலைவிதியாயிருந்தால்?" என்றாள் காமாட்சி அம்மாள்.

"ஏன், அம்மா! இப்படி டில்லியைப் பற்றிக் குறை சொல்கிறீர்களே? பிருதிவிராஜனுடைய கோயிலும் அரண்மனையும் இருந்த இடம் எவ்வளவு நன்றாயிருந்தது? எனக்கு அந்த இடத்தை விட்டு வருகிறதற்கு மனமே யில்லை!"

"சிவ சிவா! கோயிலை இடித்து மசூதி கட்டியிருக்கிறது! அதைப் பார்க்கிறதற்கு என்னை வேறே அழைத்துக் கொண்டு போய் விட்டீர்கள்! இந்த ஊரைப் பார்த்த பாவம் காசிக்குப் போய்க் கங்கையிலே ஸ்நானம் பண்ணினால்தான் தீரும்!" என்றாள் காமாட்சி அம்மாள்.

"இந்த ஊரிலேயும் யமுனை இருக்கிறதே, மாமி! யமுனையும் புண்ணிய நதிதானே! யமுனையில ஸ்நானம் செய்தால் பாவம் போய்விடாதா?" என்றான் சூரியா.

"அத்தனை மோசமா,—இந்த ஊரில் உள்ள யமுனை, யமுனையாகவே எனக்குத் தோன்றவில்லை. ஸ்ரீமத் பாகவதத்திலே சொல்லியிருக்கிற யமுனை நதி இதுதான் என்று சொல்கிறாய்?"

"சாக்ஷாத் அந்த யமுனையேதான் இது! பின்னே எப்படியிருக்கும் என்று எதிர்பார்த்தீர்கள்? யமுனைக் கரையில் கடம்ப மரத்தின் கீழ் நின்று கிருஷ்ண பகவான் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருப்பார் என்று நினைத்தீர்களோ? அது துவாபரயுகம், இது கலியுகம்" என்றான் ராகவன்.

"கலியுகம் என்றுதான் நன்றாய்த் தெரிகிறதே! அடாடா! உன் தகப்பனார் பாகவதம் தசமஸ்கந்தத்திலிருந்து படித்துக் காட்டி அர்த்தம் சொல்வார். யமுனையும் கிருஷ்ண பகவானும் கோபிகா ஸ்திரீகளும் நம் கண் முன்னால் நிற்பது போல் இருக்கும். கிருஷ்ணனும் கோபிகைகளும் வேண்டாம், அப்பா! கிருஷ்ணன் மேய்த்த பசுமாடுகளாவது இருக்கக் கூடாதோ? மந்தை மந்தையாய் எருமை மாடு யமுனையில் விழுந்து கிடக்கிறதே?"

"கிருஷ்ணன் பசுமாடு மட்டுந்தான் மேய்த்தாரோ, எருமை மாடும் சேர்த்து மேய்த்தாரோ? நமக்கு எப்படி நிச்சயமாய்த் தெரியும்?" என்று ராகவன் சொன்னான்.

"கிருஷ்ணன் ஒரு நாளும் எருமை மாடு மேய்த்திருக்க மாட்டார். பசுமாடுதான் மேய்த்திருப்பார்! பாகவதத்தில் சொல்லியிருப்பதெல்லாம் பொய்யாயிருக்குமா?"

"ஒரு வேளை பாகவதத்தில் வரும் கிருஷ்ண பகவான் பசுமாடு மேய்த்திருக்கலாம். ஆனால் இப்போதெல்லாம் சினிமாக்களில் வரும் கிருஷ்ண பரமாத்மாக்கள் எருமை மேய்க்கத்தான் லாயக்கானவர்கள்!"

"சினிமாவும் இனிமாவும் நான் என்னத்தைக் கண்டேன்?......அது எப்படியாவது இருக்கட்டும். என்னைக் காசிக்கு எப்போது அழைத்துக் கொண்டு போகிறாய், ராகவா!"

"காசிக்குப் போனால் இதை விட அதிகமாய்க் குறை சொல்லுவீர்கள்! கங்கை நதி கூடப் பார்க்கிறதற்கு ஒரு மாதிரிதான் இருக்கும்! நம்ம காவேரி தீரத்தைப் போல் இரண்டு பக்கமும் ஒரே சோலையாயிருக்கும் என்று நினைத்துக் கொள்ளாதீர்கள்!"

"ஏன், ஸார்! காசிக்குப் போவது இருக்கட்டும்; நாம் ஆக்ராவுக்கு எப்போது போகிறது?" என்று சீதா கேட்டாள்.

"ஆக்ராவைப் பார்க்கா விட்டால் நீ தூங்கமாட்டாய் போலிருக்கிறது. வருகிற பௌர்ணமியன்றே போகலாம். சூரியா! நீயும் வருகிறாய் அல்லவா?" என்றான் ராகவன்.

"பேஷாக வருகிறேன். எங்கே நீங்கள் என்னைக் கூப்பிடாமல் இருந்து விடுவீர்களோ என்று என்னுடைய நெஞ்சு திக், திக் என்று அடித்துக் கொண்டிருந்தது!" என்றான் சூரியா.

• • •

அன்று டில்லியைப் பார்க்கச் சூரியாவையும் அழைத்துக் கொண்டு சென்றது ராகவனுக்குச் சில விஷயங்களில் மிகவும் சௌகரியமாயிருந்தது. சீதா தன்னையே எல்லாக் கேள்விகளும் கேட்பதற்குப் பதிலாக மாற்றி மாற்றிச் சூரியாவையும் சில கேள்விகள் கேட்டாள். அவனுக்குத் தெரியாத விஷயங்களை மிக உற்சாகமாகச் சூரியா சொல்லிக் கொண்டு

வந்தான். வேடிக்கை பார்க்கப் போகும் இடங்களில் ஸ்திரீகளுடன் பேசுவதற்கும் அவர்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்வதற்கும் ஒரு தனிப் பொறுமையும் சாமர்த்தியமும் வேண்டும். ராகவனுக்கு அந்த ஆற்றல் அவ்வளவாக இல்லை. சூரியாவுக்கு இருந்தது. இது ராகவனுக்கு மிகவும் சௌகரியமாயிற்று.

பழைய அரண்மனையையோ, மசூதியையோ, கோட்டையையோ பார்க்கப் போனால், ராகவன் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு, "நீங்கள் போய்ச் சுற்றிப் பார்த்து விட்டு வாருங்கள்!" என்று சொல்லி விடுவான். அவர்கள் சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கையில் இவன் தன்னுடைய தனிப்பட்ட சிந்தனைகளில் மனதை ஈடுபடுத்திக் கொண்டிருப்பான். அப்படித் தனிப்படச் சிந்தனை செய்வதற்கு என்ன இருந்தது என்று கேட்டால், ஆம், ஒரே ஒரு விஷயம் இருக்கத்தான் இருந்தது. அந்த இடங்களுக்கெல்லாம் முன்னொரு சமயம் யாரை அழைத்துக் கொண்டு வந்து பார்த்தானோ, அந்தப் பெண்ணைப் பற்றிய சிந்தனைதான்! அன்றைக்கு டில்லி ரயில்வே ஸ்டேஷனில் தான் பார்த்தவள் அவள்தானா, இல்லையா? அவள் இல்லையென்றால், அவ்வளவு தத்ரூபமாகத் தாரிணியைப் போலவே எப்படி உருவம் பெற்றிருக்க முடியும்? இரண்டு பெண்களுக்குள் அவ்வளவு அபூர்வமான உருவ ஒற்றுமை இருக்க முடியுமா? தாரிணியாக இருந்தால், அவள் இறந்த செய்தி பொய்யாகத்தானே இருக்க வேண்டும்? எதற்காக யார் தன்னை அவ்விதம் அவள் இறந்து விட்டதாகச் சொல்லி ஏமாற்றியது? மேலும் அவள் அன்று டில்லி ஸ்டேஷனில் வண்டி நகரும் சமயத்தில் "நான் தாரிணி இல்லை; நீங்கள் தவறு செய்கிறீர்கள்!" என்று எதற்காகச் சொல்லியிருக்க வேண்டும்?

தாரிணியாகவே இருக்கட்டும், அல்லது அவளைப் போல அபூர்வ உருவ ஒற்றுமையுள்ளவளாயிருக்கட்டும், அந்தப் பெண்ணை மறுபடியும் ஒரு தடவை சந்தித்து விசாரித்து உண்மையைத் தெரிந்து கொண்டாலன்றி தனக்கு மன நிம்மதி ஏற்படாது என்று ராகவனுக்குத் தோன்றியது.

ஆனால் அவளை எப்படிச் சந்திப்பது? எங்கே என்று தேடுவது? ஆக்ரா பக்கம் போகும் பாஸஞ்சர் ரயிலிலே தான் அவள் ஏறியிருந்தாள் என்பது ராகவனுடைய நினைவில் இருந்தது. ஒரு வேளை ஆக்ராவிலேயே அவள் இருந்தாலும் இருக்கலாம். அல்லது ஆக்ரா போகும்போது வழியில் எங்கேயாவது அவளைச் சந்திக்கலாம். யார் கண்டது? உலகத்தில் இதைக் காட்டிலும் அதிசயமான எத்தனையோ சம்பவங்கள் நடந்திருக்கவில்லையா!

இம்மாதிரியான, பற்பல நோக்கங்களுடனே ராகவன் வருகிற பௌர்ணமியன்று ஆக்ராவுக்குப் போவதென்று திட்டம் போட்டான்.

* * *

சூரியா வருகிறதாகச் சொன்னதும், "நீயும் வருகிறாயா?" என்று ராகவன் கேட்க, காமாட்சி அம்மாள், "போதும்! போதும்! இன்றைக்குப் பார்த்தது ஏழு ஜன்மத்துக்கும் போதும்! பிருந்தாவனம், வடமதுரை, காசி இப்படிப் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவதானால் சொல்லு! வருகிறேன். பாழுங் கோட்டையையும் இடிந்த மசூதியையும் பார்க்கப் போவதாயிருந்தால் நான் வரவில்லை! குழந்தையைப் பார்த்துக் கொண்டு வீட்டிலேயே இருக்கிறேன்" என்றாள்.

"ரொம்ப சரி; நானும் அது மாதிரிதான் எண்ணினேன். இந்தத் தடவை நாங்கள் ஆக்ராவுக்குப் போய் விட்டுத் திரும்பி விடுகிறோம். அப்புறம் ஒரு தடவை சூரியாவையும் உங்களையும் சேர்த்து க்ஷேத்திர யாத்திரைக்கு அனுப்பி விடுகிறேன். ஏன், சூரியா! என்ன சொல்லுகிறாய்? அம்மாவை அழைத்துக் கொண்டு போய் வருகிறாயா?" என்று ராகவன் கேட்டான்.

"அதற்கென்ன ஆட்சேபணை? இந்தியாவின் புராதன க்ஷேத்திரங்களைப் பார்க்க வேண்டுமென்னும் ஆசை எனக்கும் இருக்கிறது. மாமியைப் போல் பக்தியுள்ளவர்களை அழைத்துப் போகக் கொடுத்து வைக்க வேண்டாமா?" என்று சொல்லி விட்டுச் சூரியா புறப்பட்டான்.



அவன் போன பிறகு, "ராகவா! சூரியா தங்கமான பிள்ளை; எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது: என் தங்கை பெண் அம்புஜத்துக்கு இரண்டு வருஷமாய் வரன் தேடிக் கொண்டிருக்கிறார்களே? நம்ம சூரியாவுக்குக் கொடுத்தால் என்ன?" என்றாள் காமாட்சி அம்மாள்.

"கொடுத்தால் என்ன? திவ்யமாய்க் கொடுக்கலாம். நீங்கள் எப்போது தீர்மானித்து விட்டீர்களோ, அப்போது பாதிக் கலியாணம் நடந்தது போலத்தான்! சூரியா சம்மதித்தால் பாக்கிப் பாதிக் கலியாணமும் செய்து விடலாம்."

"எல்லாம் தானே சம்மதித்து விடுகிறான். அம்புஜத்துக்கு என்ன குறைச்சல்? கொஞ்சம் கறுப்பாயிருந்தாலும் முகத்தில் களை உண்டு. சூரியா தான் காங்கிரசில் சேர்ந்தவனாயிற்றே. அவன் அப்படியெல்லாம் ஒன்றும் பார்க்க மாட்டான்."

"சூரியா சம்மதித்தால் எனக்கு ஒரு ஆட்சேபமும் இல்லை, அம்மா! நான் குறுக்கே நிற்கவில்லை. தாராளமாக அம்புஜத்தைச் சூரியாவுக்குக் கலியாணம் பண்ணி வையுங்கள்!"

"நம்ம சீதாவும் கொஞ்சம் என்னுடன் சேர்ந்து சொன்னால் சூரியா சம்மதித்து விடுவான்" என்றாள் காமாட்சி அம்மாள்.

"அதென்னமோ, அம்மா! சூரியாவுக்குக் கலியாணப் பேச்சு அவ்வளவு பிடிக்கவில்லை போல் தோன்றுகிறது. சூரியாவின் அம்மா யாரோ ஒரு பெண்ணை அவனுக்குப் பார்த்திருந்தாளாம். அது பிடிக்காமல்தான் சூரியா வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு வெளியே கிளம்பி விட்டான் என்று பிரஸ்தாபம். என்னைக் கேட்டால், கலியாண விஷயத்தை 'ட்டும் அவரவர்களுக்கே விட்டு விடுவது நல்லது என்பேன். தாயார் தகப்பனார் தலையிடவே கூடாது. இஷ்டப்பட்டவர்களைக் கலியாணம் செய்து கொள்வதற்குத் தடை செய்யவும் கூடாது; இஷ்டப்படாதவர்களை கலியாணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தவும் கூடாது. அப்படி வற்புறுத்துகிற தாயார் தகப்பனாரைச் சுண்ணாம்புக் காளவாயில் போட்டு விட வேண்டும்!" என்று சீதா ஆத்திரமாய்ப் பேசினாள்.

இவ்விதம் சீதா கூறியது இது இரண்டாவது தடவை. அதைக் கேட்டுக் காமாட்சி அம்மாளின் முகம் சுருங்குவதை ராகவன் கவனித்தான்.

ஏழாம் அத்தியாயம்

## லலிதாவின் கடிதம்

"என் உயிருக்குயிரான தோழி சீதாவுக்கு லலிதா எழுதிக் கொண்டது. நீ டில்லிக்குப் போய்ச் சேர்ந்ததும் எழுதிய கடிதத்தைப் பெற்று அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தேன். அத்தனை தூரம் போன பிறகும் நீ என்னை மறந்துவிடாமல் கடிதம் எழுதியிருக்கிறபடியால் நீதான் என்னுடைய உண்மையான பிராண சிநேகிதி என்பதில் சந்தேகமில்லை. நாம் இரண்டு பேரும் உயிரோடிருக்கும் வரையில் நம்முடைய சிநேகம் இப்படியே இருந்து வரவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

வழக்கம்போல் கடிதம் விவரமாகவும் நீளமாகவும் எழுதாமல் சுருக்கமாய் முடித்து விட்டாயே என்று மட்டும் கொஞ்சம் ஏமாற்றமாயிருந்தது.

ஆனால் புதிய இடத்தில் புதுக் குடித்தனம் போட்டதில் உனக்கு வேலை அதிகமாயிருந்திருக்கும். ஆகையினால்தான் அவ்வளவு கொஞ்சமாக எழுதிவிட்டாய் என்று நினைக்கிறேன். வார்த்தைகளை எண்ணிப் பார்த்தேன். மொத்தம் முப்பத்தாறு வார்த்தைகள் இருந்தன. இவ்வளவு கொஞ்சமாக நீ இதற்கு முன் எப்போதும் எழுதியதில்லை. புதுக் குடித்தனம் போடும் வேலையெல்லாம் தீர்ந்ததும் நீ எப்போதும்போல் விவரமாகக் கடிதம் எழுத வேண்டும். ஏழெட்டுப் பக்கத்துக்குக் குறையக் கூடாது.

நான் ராஜம்பேட்டையிலிருந்து இந்தக் கடிதத்தை எழுதுவது உனக்கு ஒரு வேளை அதிக ஆச்சரியமாயிருக்கும். அல்லது ஒரு வேளை அதிக ஆச்சரியமாயிராது. ஆனால் நீ கொஞ்சமாவது ஆச்சரியப் படுவாய் என்று நம்புகிறேன். நான் இங்கே எதற்காக வந்தேன் என்று தெரிந்தால் கட்டாயம் ஆச்சரியப்பட்டே தீர்வாய்.

சீதா! நான் சொல்லாமலே காரணத்தைக் கண்டு பிடி, பார்க்கலாம். கண்டு பிடிக்க முடியவில்லையா? ஒரு 'க்ளு' கொடுக்கிறேன். என்னுடைய கை ஒவ்வொன்றிலும் இப்போது அரை மணங்கு பளுவுள்ள வளையல்கள் ஏறி இருக்கின்றன. முழங்கை வரையில் வளையல் மயந்தான்!

இதை எழுதும்போது என்னுடைய கை வளையல்கள் ஒன்றோடொன்று இடித்துக் கொள்வதால் 'சளபள' வென்று சத்தம் உண்டாகிறது.

இப்போது காரணம் தெரிகிறதா, சீதா! எனக்கு வளையல் காப்புக் கலியாணம் நடந்து நாலுநாள் ஆகிறது. வளைகாப்புக்காகத்தான் இந்த ஊருக்கு வந்தேன். அடுத்த மாதம் சீமந்தம் வைத்திருக்கிறது. அதற்குள் தேவபட்டணத்துக்குத் திரும்பிப் போக வேண்டும். சீமந்தக் கலியாணம் புக்ககத்தில்தான் நடக்க வேணுமென்று உனக்குத் தெரியுமோ, இல்லையோ?

என் அம்மா இப்போதுதான் உண்மையான சந்தோஷம் அடைந்திருக்கிறாள். நடுவிலே ரொம்பவும் என்னைத் திட்டிக் கொண்டும் குறைப் பட்டுக் கொண்டும் இருந்தாள். 'உடன் எடுத்த பெண்கள் எல்லாம் கையில் இரண்டு வயதுக் குழந்தையுடன் இருக்கிறார்கள்; நீ இப்படி மரமாயிருக்கிறாயேடி, ஜடமே!' என்று ஓயாமல் பிடுங்கி எடுத்துக் கொண்டிருந்தாள். 'குழந்தை பிறப்பதும் பிறக்காததும் கடவுளுடைய செயல் அல்லவா?' என்று நான் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் அம்மாவின் மனது சமாதானம் அடையவில்லை. இப்போதுதான் அவளுடைய மனக் குறை தீர்ந்து சந்தோஷமாயிருக்கிறாள். என்னைத் திட்டாமலும் இருக்கிறாள். திட்டுவதற்குப் பதிலாக, 'இந்தப் பெண் பெற்றுப் பிழைக்க வேண்டுமே? பிரசவத்துக்கு இங்கே அனுப்புவார்களோ, அனுப்ப மாட்டார்களோ, தெரியவில்லையே! அம்பிகே! பராசக்தி!' என்று ஓயாமல் புலம்பிக் கொண்டிருக்கிறாள். ஓயாத புலம்பலாயிருந்தாலும் சந்தோஷமான புலம்பல்தான்.

சீதா! உனக்கு வளைகாப்பு, சீமந்தம் ஒன்றும் நடைபெறவில்லை என்பது எனக்கு ஞாபகம் வருகிறது. உன் அகத்துக்காரர் சீமந்தத்துக்காகச் சீமையிலிருந்து வர முடியாது என்று சொல்லி விட்டதாக எழுதியிருந்தாயல்லவா? உன் அகத்துக்காரர் அவ்விதம் எழுதியது எனக்கு ஒரு விதத்தில் நன்மையாக முடிந்தது. அதுவரையில் என் அம்மாவின் மனதில் உன்பேரில் கொஞ்சம் கோபம் இருக்கத்தான் இருந்தது. என்னைப் பார்ப்பதற்கு என்று வந்தவர் உன்னைக் கலியாணம் செய்து கொண்டது பற்றித்



தான் கோபம். ஆனால் உனக்குச் சீமந்தம் நடக்கவில்லை என்ற செய்தியை அறிந்ததும் அம்மாவுக்கு உன் பேரில் இருந்த கோபம் மாறிவிட்டது. 'அந்தப் பெண் சீதா நல்ல வேளையாக இருந்தாளோ, இப்பேர்ப்பட்ட மாப்பிள்ளை எனக்கு வாய்க்காமல் பிழைத்தேனே!' என்று உற்சாகத்துடன் சொன்னாள். அது முதல் அடிக்கடி அவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

சீதா! என் அம்மாவைப் போல் நானும் நினைப்பதாக நீ எண்ணிக் கொள்ளாதே! ஒருநாளும் இல்லை. வளை காப்பு நடக்கா விட்டால் என்ன, சீமந்தம் நடக்கா விட்டால்தான் என்ன? உன் கணவர் உன்னிடம் வைத்திருக்கும் அன்புக்கு ஈடு ஏது, இணை ஏது? புருஷனுடைய அன்பும் ஆதரவும் முக்கியமா? வளை காப்பும் சீமந்தமும் முக்கியமா? அதற்கென்ன, சாஸ்திரம் என்பார்கள், சம்பிரதாயம் என்பார்கள்! 'சாஸ்திரமாவது, மண்ணாங் கட்டியாவது? வெள்ளைக்காரர்களும் கிறிஸ்துவர்களும் சீமந்தமா பண்ணிக் கொள்கிறார்கள்! அவர்களுடைய குழந்தைகள் நன்றாயில்லையா?' என்று சூரியா ஒருசமயம் சொன்னான். அவன் சொன்னதை நானும் ஆமோதித்தேன். சீதா! என் னுடைய அபிப்பிராயத்தில், கணவனுடைய அன்புக்கு மிஞ்சிய பாக்கியம் இந்த உலகத்தில் ஒன்றுமே யில்லை. இந்த விஷயத்தில் நீ மிக்க பாக்கியசாலி. நான் அவ்வளவு பாக்கியம் செய்ய வில்லை.



இவ்விதம் நான் எழுதியதிலிருந்து என் கணவர்பேரில் நான் புகார் கூறுவதாக எண்ணாதே! இவர் என்னிடம் வைத்திருக்கும் ஆசைக்கும் அன்புக்கும் அளவே இடையாது.

ஆனாலும் ஒரு விஷயத்தைச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. என் குறையை உன்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வேன்? என் ஆருயிர்த் தோழி! இத்தனை நாள் சொல்லாததை, எழுதாததை, இன்று தெரியப்படுத்துகிறேன். எவ்வளவோ இவர் என்பேரில் ஆசையுள்ளவரா யிருந்தும் பல விஷயங்களில் அம்மாவுக்குப் பிள்ளையா யிருக்கிறார்! அம்மா இட்ட கோட்டை இவர் தாண்டுகிறதில்லை. மற்றக் காரியங்களில் அம்மாவிடம் பக்தியோடு இருக்கட்டும். நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் தாலி கட்டிய மனைவி விஷயத்திலே கூடவா அப்படி இருக்கிறது? அம்மா உத்தரவு கொடுத்தால்தான் என்னிடம் பேசுவார். அம்மா உத்தரவு கொடுத்தால்தான் என்னை எங்கேயாவது அழைத்துப் போவார். —உன்னிடம் சொன்னால் என்ன? என்னுடைய படுக்கை அறைக்கு வருவதற்குக் கூட அம்மாவின் உத்தரவு இருந்தால்தான் வருவார். இதைப்பற்றி நான் எப்போதாவது குறை தெரிவித்துக் கொண்டால், 'உன்னிடம் எனக்குள்ள அந்தரங்க அன்பு உனக்குத் தெரியாதா, லலிதா! அம்மா இஷ்டப்படி நடக்காவிட்டால் வீட்டில் வீண் கலகம் ஏற்படும். அதை நீ விரும்புகிறாயா? பொறுத்தார் பூமி ஆள்வார்!' என்று உபதேசம் செய்கிறார்.

என் மாமியாரின் குணத்தைப்பற்றி முன்னமே குறிப்பாக எழுதி யிருக்கிறேன், சீதா! ஆனாலும் ரொம்பப் பொல்லாதவள் என் மாமியார். கலியாணத்தின்போது எவ்வளவு பரம சாதுவா யிருந்தாள்! அப்புறம் சீக்கிரத்தில் தன்னுடைய சொரூபத்தைக் காட்டி விட்டாள். கலியாணத்தின் போது சீர் வகையரா சரியாகச் செய்ய வில்லை யென்று இரண்டு வருஷம் சாந்திக் கலியாணம் பண்ணாமலே வைத்திருந்தாள். அப்பா சரணாகதி என்று அவள் காலில் விழுந்து அவள்

இஷ்டப்படியெல்லாம் சீர் செய்ய ஒப்புக் கொண்ட பிறகுதான் சம்மதம் கொடுத்தான். சாந்திக் கலியாணத்தின்போது அவளுடைய இஷ்டப்படி எல்லாம் சீர் செய்த பிறகாவது சந்தோஷம் அடைந்தாளா? அதுவும் இல்லை. இத்தனை நாள் ஒருவரிடமும் சொல்லாததை உன்னிடம் இப்போது சொல்கிறேன், சீதா! என் மாமியார் ரொம்பப் பொல்லாதவள்! ராட்சஸியேதான்! என்னை அவள் படுத்தி வைக்கிற பாட்டுக்கு அளவேயில்லை. ஓயாமல் ஒழியாமல் என்மேல் புகார் செய்து கொண்டிருப்பதே அவளுக்கு வேலை. நான் எது செய்தாலும் அவளுக்குப் பிசகாகப் படுகிறது. ஒரு காரியத்தைச் செய்யவில்லை என்றால், ஏன் செய்யவில்லை என்று கேட்கிறாள். 'சுயபுத்தி என்பது வேண்டாமா? எதுவும் ஒருவர் சொல்லித்தான் செய்ய வேண்டுமா!' என்கிறாள். நானாக ஏதாவது செய்து விட்டாலோ, 'உன்னை யார் செய்யச் சொன்னது? நான் ஒருத்தி இருக்கிறேனே, கேட்கக் கூடாதா?' என்கிறாள். தொட்டதற்கெல்லாம் எரிந்து விழுகிறாள். வேண்டாம் என்கிற மாட்டுப்பெண் கைபட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம், ஒன்றும் படாமலிருந்தாலும் குற்றம் என்பதாக இருக்கிறது. என்னுடைய நாத்தனார் ஒருத்தியைக் கொடுத்திருக்கிற இடத்தில் அவள் அவ்வளவாகச் சுகப்படவில்லையாம்; அவளை ரொம்பக் கஷ்டப் படுத்துகிறார்களாம். அதற்கு நான் என்னடி செய்வேன், சீதா! அந்தக் கோபத்தையெல்லாம் என் பேரில் காட்டுகிறாள் என் மாமியார்.

இவர் இருக்கிறாரே, இவரைப் பற்றி என்ன சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை. என்பேரில் ரொம்ப ஆசையாகத்தானிருக்கிறார்; இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் ஆசை மட்டும் இருந்து என்ன பிரயோஜனம், சீதா! 'அம்மாவுக்கு இது பிடிக்காது; அம்மாவுக்கு அது வருத்தம் தரும்' என்று ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறாரே தவிர, ஏதடா, இவளும் ஒரு மனுஷிதானே என்று நினைத்துப் பார்ப்பதேயில்லையடி! தாயார் தகப்பனாரை விட்டு, அண்ணன் தம்பிகளை விட்டு, பிறந்த



ஊரையும் வீட்டையும் தெரிந்த மனுஷாள் எல்லாரையும் விட்டு நம்மையே கதி என்று நம்பி வந்தவளாயிற்றே என்று ஒரு தடவையாவது எண்ணிப் பார்த்திருப்பார் என்று தோன்றவில்லை. தேவபட்டணத்தில் இத்தனை நாள் இருந்தேனே? ஒரு நாளைக்கு என்னை இவர் ஒரு சினிமா பார்க்க அழைத்துப் போனதில்லை. ஒரு நாள் சாயங்காலம் என்னை இந்த ஊர் நந்தவனத்துக்கு அழைத்துப் போனதில்லை. பழைய காலத்து மனுஷர்களாயிருந்தால் கோயில் குளம் தேர் திருநாளுக்காவது அழைத்துப் போவார்களே? அதுவும் இல்லை. கொஞ்ச நாளைக்கு முன்னால் பண்டித ஜவாஹர்லால் நேரு வந்திருந்தார். அவருடைய பிரசங்கத்தைக் கேட்க ஊரெல்லாம் திரண்டு போனார்கள். நானும் வருகிறேன் என்று ஆனமட்டும் சொன்னேன். 'அம்மா கோபித்துக் கொள்வாள்' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். எதற்கு எடுத்தாலும் அம்மா, அம்மா, அம்மாதான்! என்ன வேண்டிக் கிடந்தது? எனக்குப் பிடிக்கவேயில்லை. ஒருநாள் ரொம்ப கோபமாயிருந்தது. 'எத்தனை நாள் இப்படி என்னை ஜெயிலில் வைத்திருக்கப் போகிறீர்கள்?' என்று கேட்டு விட்டேன். வழக்கம் போல் புன்சிரிப்புச் சிரித்து விட்டு, 'கொஞ்ச நாள் பொறுத்துக் கொண்டிரு. நாம் தனிக் குடித்தனம் போய் விடுவோம். அப்புறம் நீ வைத்ததுதான் சட்டம். இரண்டு பேரும் கை கோத்துக்

கொண்டு தினம் தினம் தெருவில் ஊர் கோலம் போவோம்' என்று சொன்னார். உண்மையாகத்தான் சொன்னாரா, பரிகாசத்துக்குச் சொன்னாரா என்று யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். நிச்சயம் தெரியவில்லை. இவர் தனிக் குடித்தனம் போவார் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டாகவில்லை. ஒவ்வொரு சமயம் இவருக்கு என்னத்துக்கு இந்த வக்கீல் வேலை என்று தோன்றுகிறது. எங்கேயாவது தூர தேசத்தில், பம்பாய்—கல்கத்தா—டில்லியில், ஏதாவது ஒரு உத்தியோகம் இவர் சம்பாதித்துக் கொள்ளக் கூடாதா என்று தோன்றுகிறது. நல்ல சமயம் பார்த்துச் சொல்லலாம் என்று இருக்கிறேன். என்னுடைய அதிர்ஷ்டம் எப்படியிருக்கிறதோ?

சீதா! நீ பாக்கியசாலி! எல்லா விஷயத்திலும் என்னுடைய நிலைமைக்கு நேர்மாறாயிருக்கிறது உன்னுடைய நிலைமை. உன் மாமனாரும் மாமியாரும் உன்னைத் தாங்குகிறார்கள். தரையில் உன் கால் படக்கூடாது என்று அவ்வளவு அன்பாயிருக்கிறார்கள். உன் கணவரோ இந்தியாவின் தலை நகரத்தில் உத்தியோகம் பார்க்கிறார். கலியாணம் ஆன உடனேயே டில்லிக்கு அழைத்துப் போனார். இப்போது கேட்க வேண்டுமா? எல்லா இடங்களுக்கும் உன்னை அழைத்துப் போவார். தினம் தினம் சினிமாவுக்குப் போவீர்கள். ஏதோ நீயாவது இப்படி சந்தோஷமாயிருக்கக் கொடுத்து வைத்திருக்கிறாயே என்பதை எண்ணித்தான் இப்போதெல்லாம் நான் சந்தோஷப்படுகிறேன்.

சீதா! இந்த ராஜம் பேட்டைக்கு வந்தது முதல் எனக்கு உன்னுடைய ஞாபகமே வந்துகொண்டிருக்கிறது. தினம் தினம் தபால் ரன்னர் 'ஜிங் ஜிங்' என்று மணி அடித்துக்கொண்டு வருகிற சத்தத்தைக் கேட்டதும், பம்பாயிலிருந்து உன் கடிதத்தை எதிர்பார்த்து நான் தபாலாபீஸுக்கு ஓடியது நினைவு வருகிறது. குளத்தங்கரைக்குப் போனால், படிக்கட்டுகளில் உட்கார்ந்து நாம் மனோராஜ்யம் செய்ததெல்லாம் நினைவு வருகிறது. நீ சொன்ன கதையெல்லாம் ஞாபகம் வருகிறது. லைலா மஜ்னூன், அனார்க்கலி, ரோமியோ ஜூலியட், சகுந்தலை, சம்யுக்தை முதலியவர்கள் எதிரில் வந்து நிற்கிறார்கள். அடியே! காதல் காதல் என்று சொல்லுவதெல்லாம் உண்மையிலும் உண்டா? அல்லது கதைகளிலே மட்டுந்தானா? இத்தனை நாளும் இந்தியாவின் சக்ரவர்த்தியாயிருந்த எட்டாவது எட்வர்ட் என்பவர் யாரோ ஒரு பெண்ணின் காதலுக்காக ராஜ்யத்தைத் துறந்து விட்டாராமே? இது உண்மையா, சீதா! இப்படியெல்லாம் நடக்கக் கூடும் என்று என்னால் நம்ப முடியவில்லையே!

நேற்று அம்மாவும் நானும் சுண்டுவும் வண்டி கட்டிக் கொண்டு காவேரிக்குக் குளிப்பதற்குப் போயிருந்தோம். போகும் போதும் வரும் போதும் உன்னுடைய நினைவாகவே இருந்தது. வழியில் மதகடியில் தபால்கார பாலகிருஷ்ணனுடன் சூரியா குத்துச் சண்டை போட்டுக் கொண்டிருந்த காட்சி அப்படியே எதிரில் நடப்பது போல் இருந்தது.

சீதா! சூரியா உங்களுடன் டில்லிக்கு ஒரே ரயிலில் வந்ததையும், வழியில் உங்களுக்கு ஒத்தாசையாயிருந்ததையும் உன் கடிதத்திலிருந்து அறிந்து மிகவும் சந்தோஷம் அடைந்தேன். ஒருவேளை டில்லியிலேயே சூரியா தங்கிவிடலாம் என்று அவன் சொன்னதாக எழுதியிருக்கிறாய். அப்படித் தங்கினால் எனக்குச் சந்தோஷமாயிருக்கும். ஏனென்றால் நீ அவனைக் கவனித்துக் கொள்வாய் என்கிற நம்பிக்கை எனக்கு உண்டு.

சூரியா ஏன் திடீரென்று படிப்பை விட்டு விட்டான், ஏன் இப்படி உலகத்தையே வெறுத்தவன் போலப் பேசுகிறான் என்று கேட்டிருந்தாய். அப்போது எனக்குத் தெரியவில்லை. இந்தத் தடவை ராஜம் பேட்டைக்கு வந்த போதுதான் தெரிந்தது.

என் மூத்த தமையன் கங்காதரன் இருக்கிறானே, அவனை உனக்கு அதிகமாகத் தெரியாது. ஒரே ஒரு தடவை நம்முடைய கலியாணத்தின்போது மட்டுந்தான் நீ பார்த்திருக்கிறாய். கங்காதரனை எனக்கு எப்போதுமே பிடிக்காது; பொல்லாதவன். அவனால் நம்முடைய கலியாணத்தின்போது ஒரு பெரிய சங்கடம் நேர்வதற்கு இருந்ததாம். குடியானத் தெரு ஆன்

ஒருவனைச் சொன்ன உடனே ஏதோ ஒரு வேலையைச் செய்யவில்லை என்பதற்காகக் கங்காதரன் அடித்து விட்டானாம். குடியானத் தெரு ஆட்கள் கட்டுப்பாடு பண்ண ஆரம்பித்து விட்டார்களாம். இதைத் தெரிந்து கொண்டு சூரியா குடியானத் தெருவுக்குப் போய் அண்ணாவுக்குப் பதிலாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டானாம். இதன்பேரில் குடியான ஆட்கள் சமாதானம் அடைந்தார்களாம்.

அடுத்த கோடை லீவுக்கு இரண்டு பேரும் ஊருக்கு வந்திருந்தபோது கங்காதரன் சூரியாவைச் சண்டை பிடித்தானாம், 'எனக்காக உன்னை யாரடா மன்னிப்புக் கேட்டுக் கொள்ளச் சொன்னது?' என்று. சூரியா ஏதோ பதில் சொன்னானாம். அதற்குப் பதிலாக அண்ணா அவனை அடித்தானாம். சூரியா அடியைப் பொறுத்துக் கொண்டு பொறுமையாயிருந்தானாம்.

இப்படிச் சூரியா இருந்தும் கங்காதரனுடைய கோபம் தீரவில்லை. மனஸ்தாபம் முற்றிக் கொண்டிருந்தது. போன வருஷம் சூரியா இங்கே வந்திருந்தபோது ஏதோ மனைக்கட்டுத் தகராறில் சூரியா குடியானவர்கள் கட்சி பேசினானாம். மறுபடியும் கங்காதரன் சூரியாவை அடித்துவிட்டானாம். அக்கிரகாரத்தில் எல்லாரும் கங்காதரன் கட்சியாம். இதனால் சூரியா மனக்கசப்பு அடைந்து, 'உங்கள் சொத்தை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்; எனக்குப் பங்கு வேண்டாம்' என்று சொல்லி விட்டுக் கிளம்பி விட்டானாம். குடும்பத்துப் பணம் வேண்டாம் என்பதற்காகவே படிப்பையும் விட்டு விட்டானாம். சீதா! இந்த விவரமெல்லாம் இந்தத் தடவை ராஜம் பேட்டைக்கு வந்தபோதுதான் எனக்கு நன்றாய்த் தெரிந்தது. ஏனெனில் அம்மாவும் அப்பாவும் ஓயாமல் சூரியாவைப் பற்றிப் பேசி வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். சில சமயம் 'உன்னால்தான் வந்தது' 'உன்னால்தான் வந்தது' என்று ஒருவருக்கொருவர் சண்டை பிடித்துக் கொள்கிறார்கள்.

சீதா! எனக்குச் சூரியாவைப் பற்றி நினைக்க நினைக்க வருத்தமாயிருக்கிறது. சூரியா ரொம்ப நல்ல பிள்ளையடி! என்னிடம் அவனுக்கு எவ்வளவு ஆசை தெரியுமா? என்னிடம் மட்டும் என்ன? உன்னிடத்தில்கூட அவனுக்கு எவ்வளவோ அபிமானம் உண்டு. டில்லியில் இருக்கும் வரையில் அவனை நீ கொஞ்சம் கவனித்துக் கொள். வேளா வேளைக்குச் சாப்பிடச் சொல். சூரியாவை மட்டும் நீ கொஞ்சம் கவனித்துக் கொண்டால் என் அம்மா கூட உன்பேரில் ரொம்ப சந்தோஷப் படுவாள்.



இந்தக் கடிதம் ரொம்ப ரொம்ப ரொம்ப நீளமாய்ப் போய்விட்டது. இதை நான் ஒரே நாளில் எழுதிவிடவில்லை. மூன்று நாளாய் எழுதி இன்றைக்கு முடிக்கிறேன். என் மனதிற்குள் வெகு நாளாய் வைத்திருந்ததையெல்லாம் கொட்டி விட்டேன். புக்ககத்தில் இருக்கும்போது இவ்வளவு நீளம் கடிதம் எழுத எனக்கு அவகாசம் ஏது? மேலும் இதையெல்லாம் கடிதத்தில் எழுதவும் முடியாது. யாராவது பார்த்து விடுவார்களோ என்று பயமாயிருக்கும்.

ஏதாவது நான் அசட்டுத்தனமாக எழுதியிருந்தாலும் மன்னித்துக் கொள். இந்த உலகத்தில் என்னுடைய அருமைத் தோழி நீ ஒருத்திதான். உன்னிடம் என் மனதில் உள்ள குறையைச் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வேன்? சீக்கிரம் விவரமாகப் பதில் எழுது. இப்படிக்கு,

சதா உன் நினைவாகவே யிருக்கும்
அன்பார்ந்த சிநேகிதி
லலிதா.”

# நல்ல நாள்

காட்டூர்க் கண்ணன்

காத்தான் :— நல்ல நாளாம் பெண்ணே நல்ல நாளாம் — இன்று
நாட்டின் சுதந்திரம் மீட்ட நாளாம்

1. மஞ்சள் குளித்து மடியுடுத்தி — பெண்ணே
மங்களமாய் நெற்றிப் பொட்டுமிட்டு
நெஞ்சிலே நாட்டை நினைக்கவிட்டு — எங்கும்
நிறைந்த தெய்வத்தை வேண்டும் நாளாம்

2. வீடு விளக்கிக் கோலமிட்டு — பெண்ணே
விளக்கு வைத்து அலங்கரித்து
சாதிக் கொடுமையை ஓட்டிவிட்டோம் — யாரும்
சமதை என்றிடும் நாளிதுவாம்.

3. சத்தியம் காத்திட்ட நாடிதிலே — பெண்ணே
சனியரும் வஞ்சனை ஒழிந்திடவே
உத்தமர் காந்தியின் மெய்வழியில் — இங்கு
உண்மை நிலைத்த திருநாளாம்

4. கோடித் தெருவில் கொடிகள்கட்டி — பெண்ணே
கொண்டாடப் போகிறார் நல்ல நாளை
வேடிக்கை பார்க்கநாம் போய்வரலாம் — கண்ணே
வேணதெல்லாம் அங்கே வாங்கித்தாரேன் !

காத்தம்மா :—நாட்டுக்கு நல்ல நாளானாலும் — வீட்டில்
நாத்தியின் ஆட்சி அழிந்திட்டதோ ?
கேட்ட சுதந்திரம் வந்தாலும் — வீட்டில்
கிழவி தொல்லைதான் ஓய்ந்திட்டதோ ?

6. வீட்டுக்கு மாடாய் உழைத்திடவே — அத்தான் !
விதியென் தலையிலே போட்டிருக்கு
நாட்டுக்கு நாற்பது மந்திரியாம் — இந்த
நியாயத்தைக் கேட்க ஒருவரில்லை !

காத்தான் :—வீட்டு ரகளையைத் தீர்த்து வைக்கும் — நல்ல
வேலைக்கு மந்திரி நானிருக்கேன்
நாட்டினை ஆளும் மந்திரிக்கும் — கண்ணே
நாளுக்கும் பொழுதுக்கும் வேலையுண்டாம்

8. நாத்தி புருஷனும் நாளைவாரான் — அவன்
நாலைந்து நாளிலே போயிடுவான்
பாட்டியின் தொல்லை நீங்காது — அவள்
பார்வை மழுங்கும் காலமாச்சு

9. தோட்டத்தில் மல்லிகை பூத்திருக்கு — கண்ணே
தொடுத்துக் கொண்டையில் வைத்துக் கொண்டு
சீட்டிப் புடவையைக் கட்டிக்கிட்டுக் கொஞ்சம்
சிரிச்ச முகமாய்ப் புறப்படடி !

நல்ல நாளாம் இன்று நல்ல நாளாம் — கண்ணே
நாட்டின் சுதந்திரம் மீட்ட நாளாம்.

# ஏன் இந்த மூடுமந்திரம்?

ரஜனி

கொழும்பு, ஆகஸ்ட், 7உ.

இவ்வாரம் இலங்கை பார்லிமெண்டில் பிரதம மந்திரி ஸ்ரீ டி. எஸ். சேனநாயகா கொண்டு வந்த இரு மசோதாக்கள் இலங்கை இந்தியர்களுக்கு அதிர்ச்சியையும் மிகுந்த கவலையையும் கொடுத்திருக்கின்றன. எவர் எவர் இலங்கைப் பிரஜைகளென்பதை நிர்ணயிப்பது முதல் மசோதாவின் இலட்சியம்; வெளிநாடுகளிலிருந்து இலங்கைக்கு வருபவர்களையும் இலங்கையிலிருந்து வெளி நாடுகளுக்குப் போகிறவர்களையும் கட்டுப்படுத்துவது இரண்டாவது மசோதாவின் இலட்சியம். வழக்கமான சம்பிரதாயங்களையெல்லாம் கைவிட்டு முன்னறிக்கையில்லாமலும், கெஜட்டில் பிரசுரிக்காமலும் திடும்பிரவேசமாக இவ்விரு மசோதாக்களையும் பார்லிமெண்டில் பிரதம மந்திரி சமர்ப்பித்தது அவருடைய கட்சிப் பத்திரிகைகளையே திகைப்படையச் செய்து விட்டது. கொல்லைப்புற வழியாக மசோதாக்களைக் கொண்டுவரும் வழக்கம் கூடவே கூடாதென்று சர்க்காரை ஆதரிக்கும் 'டெயிலி நியூஸ்' பத்திரிகைகூட அழுத்தமாகக் கண்டித்து எழுதியிருக்கிறது. இதில் இன்னொரு விசேஷம் என்னவென்றால், மசோதாக்களைப் பார்லிமெண்டில் பிரேரணை செய்த பிறகும்கூட அதன் நகல்களைப் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கோ அல்லது பத்திரிகைகளுக்கோ பிரதமர் கொடுக்கவில்லை.

## ஏதேச்சாதிகாரமா?

இவ்வளவு மூடுமந்திரத்துக்கும் காரணமில்லாமலில்லை. இந்தியர்களின் பிரஜா உரிமையைப் பற்றி இன்னும் முடிவேற்படவில்லை. அதற்கு முன் இலங்கைப் பிரஜைகள் யார் என்பதைத் நிர்மாணித்துச் சட்டம் செய்துவிட்டால் அதன் பிறகு இந்திய அரசாங்கம் அந்தச் சட்டத்தை அனுசரித்துத்தானே இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை கேட்க முடியும்? அப்பொழுது கடிவாளம் இலங்கையின் கையிலிருக்குமென்று சேனநாயகா சர்க்கார் நினைக்கிறதுபோலும்! இம்மசோதாக்கள் சட்டமாகிவிட்டால் அவைகளின்படி இலங்கையிலுள்ள இந்தியர்களெல்லோரும் அந்நியர்களாகிவிடுவார்களென்று இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர் ஜனாப் அப்துல் அஜீஸ் சொன்னார். அந்நியர்களாகி விடும் இந்தியர்களை இலங்கையர்களாவதற்கு அனுமதிக்கும் இந்தியர் பிரஜா உரிமை மசோதா பார்லிமெண்டுக்கு வருவதன் முன்னால் ரஜாவிலோ அல்லது வேறு காரணங்களுக்காகவோ இந்தியாவுக்குப் போகும் இந்தியர்களை மறுபடியும் இலங்கைக்குத் திரும்பக் கூடாதென்று உள்நாட்டு மந்திரி தடை செய்யலாம். இவ்வித விரிவான அதிகாரங்களைக் குடியேற்றக் கட்டுப்பாடு மசோதா உள்நாட்டு மந்திரிக்கு அளித்திருக்கிறது. மந்திரிக்கு விருப்பமில்லாத எவரும் இலங்கைக்குள் பிரவேசிக்கக் கூடாது; இலங்கையிலிருந்து வெளியேறவும் கூடாது. விரும்பத்தகாத நபர்களை அவர் நாடு கடத்தலாம். அவருடைய தீர்ப்புக்கு அப்பீல் கிடையாது. இதுதான் ஆடி அமாவாசை தினத்தன்று பார்லிமெண்டுக்கு வந்திருக்கும் குடியேற்றக் கட்டுப்பாடு மசோதாவின் சாராம்சம்.

## சில்லறைத் தந்திரங்கள்

இதற்கிடையில் தலைமுறை தலைமுறையாக இலங்கையில் வசித்து வரும் இந்தியத் தொழிலாளர்களிடம் "நாங்கள் இலங்கையிலிருக்க விரும்பவில்லை. நாங்கள் இந்தியர்கள்தான்!" என்று எழுதி வாங்கச் சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. தோட்டத் தொழிலாளர் இந்தியாவிலுள்ள உறவினர்களுக்குப் பணம் அனுப்ப 'பி' பாரம் 'எம்' பாரம் என்று இரண்டு புதிய மனுக்களை அரசாங்கம் சென்ற வாரம் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறது. இலங்கையர்களல்லவென்று எழுதிக் கொடுக்கத் தயாரா யிருப்பவர்கள் மட்டுமே 'பி' பாரத்தின் மூலம் கஷ்டமில்லாமல் சுலபமாகப் பணம் அனுப்ப அனுமதிக்கப் படுகிறார்கள். இலங்கைப் பிரஜா உரிமை கோரும் தொழிலாளர்

பணம் அனுப்ப 'எம்' பாரத்தில் மனுக் கொடுக்க வேண்டும். அவர்களுக்குச் சுலப மாகப் பர்மிட் கிடைப்பதில்லை. எளிய தொழிலாளர் வறுமையின் காரணமாக 'பி' பாரத்தைப் பயன் படுத்திக் கொண்டு, தாங்கள் இலங்கையர் களல்லவென்று எழுதிக் கொடுத்து வருகிறார்கள். 'பி' பாரம் ஒரு சூழ்ச்சி என்று இ. இ. கா. தலைவர் ஜனப் அஸீஸும், செனட்டர் பெரிசுந்தரமும் எச்சரித்தும் கூட அவர்களுடைய புத்திமதியைக் கேட்டு நடக்கத் தொழிலாளரின் வறுமை இடம் கொடுக்கும் என்று தோன்றவில்லை.



ஸ்டுடியோ முதலாளி:— கதாநாயகனை மூன்றாவது சீனிலேயே எங்கேயோ ஓடிப் போய் விட்டதாகச் செய்து, கதையைச் சீக்கிரமாக முடியுங்கள்!

டைரக்டர்:—ஏன்?

முதலாளி:—படத்தை அடுத்த வாரமே வெளியிட வேண்டியிருக்கிறது!

## ரேடியோ நிலையத்தில்

கொழும்பு ரேடியோ நிலையத்தில் தமிழ் புரோகிராம்களைப் பிரதி மாதமும் தயார் செய்து நிர்ணயிப்பதற்காக உதவி கண்ட்ரோலர் கிரேடில், மிஸ் டி. எம். லவியான் என்ற ஒரு மலையாளத்துப் பெண்ணை நியமனம் செய்திருக்கிறார்கள். இந்த உத்தியோகத்துக்கு நல்ல சம்பளமும் செல்வாக்கும் இருப்பதைப் போல் பொறுப்புகளும் இருக்கின்றன. மிஸ் லவியான் ஒரு பி. ஏ. பட்டதாரி. அருமையாகத் தமிழ் பேசுகிறார். "தமிழ் புரோகிராம்களில் எவ்வளவு அபிவிருத்திகளை யெல்லாம் செய்கிறேன் என்பதைக் கொஞ்சம் பொறுத்திருந்து பாருங்கள்!" என்று அவர் சொன்னார்.

## புனித போதி மரத்துக்குச் சிகிச்சை

சுமார் 2300 வருடங்களுக்கு முன்னால் அசோகச் சக்கரவர்த்தி தமது மைந்தன், மகிந்தனைப் புத்தமதப் பிரசாரம்செய்ய இலங்கைக்கு அனுப்பினார். அப்பொழுது புத்த கயாவிலுள்ள வெள்ளரசு மரம் என்ற போதி மரத்தின் கிளையொன்றையும் இங்கு அனுப்பினார். அந்தக் கிளை பழங் காலச் சிங்கள மன்னர்களின் தலை நகரமான அனுராதபுரியிலே வைக்கப்பட்டு ஒரு பிரம்மாண்டமான விருட்சமாக வளர்ந்திருந்தது. அதைத் தரிசிக்க உலகின் நாலுபாகங்களிலிருந்தும் பௌத்த யாத்ரீகர்கள் வருவது வழக்கம். பிரதி வருடமும் அங்கு விசேஷ உற்சவங்கள் நடப்பதுண்டு. சிங்களவர்கள் தங்கள் உயிரினும் அரியதாக அந்த விருட்சத்தைச் சென்ற 2300 ஆண்டுகளாய்க் காப்பாற்றி வந்தார்கள். சில மாதங்களுக்கு முன் அதில் திடீரென்று பூச்சிகள் ஏற்பட்டு இப்பொழுது மரம் முழுவதுமே பட்டுப் போய்விடும்போலிருக்கிறது. மந்திரிகளுக்கும் மகாபிமானிகளுக்கும் இது மிகுந்த துக்கத்தை உண்டுபண்ணியிருக்கிறது. பிரபல தாவர சாஸ்திர நிபுணர்கள் புனித போதி விருட்சத்துக்கு இப்பொழுது சிகிச்சை செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த விருட்சம் பிழைக்க வேண்டுமென்பதற்காகத் தினசரி விசேஷப் பிரார்த்தனைகளெல்லாம் நடைபெறுகின்றன.

## * * * * * * * * கணக்கு எப்படி? * * * * * * * *

கிராமத்துக்குப் போயிருந்த ஒரு கணிதப் பேராசிரியர் வயல் வெளியைச் சுற்றிப் பார்க்கப் போனார். ஒரு வயலில் ஆட்டுக்கிடை கட்டியிருந்தது. அங்கு நின்ற குடியானவனுடன் ஆசிரியர் பேச்சுக் கொடுத்தார்.

குடியானவன் திடீரென்று, "இந்தக் கிடையில் எவ்வளவு ஆடுகள் இருக்கும், சொல்லுங்கள் பார்க்கலாம்?" என்று கேட்டான்.

ஐந்து நிமிஷம் யோசனையில் ஆழ்ந்திருந்தார் ஆசிரியர். பிறகு "நூறு" என்றார்.

"அடே! கணக்காகச் சொல்லிவிட்டீங்களே! எப்படிச் சொன்னீங்க?" என்றான் குடியானவன் ஆச்சரியத்துடன்.

ஆசிரியர் கொஞ்சங்கூடத் தயங்காமல், "ஆட்டின் கால்களையெல்லாம் முதலில் எண்ணினேன்; பிறகு அதை நான்கால் வகுத்துச் சொன்னேன்!" என்றார்.

# மோகன எழிலுடன் விளங்குங்கள்—

## பாண்ட்ஸ் இரு க்ரீம்களின் உதவியால்






**ஒன்று சுத்தம் செய்ய - மற்றது பாதுகாக்க!**

எப்பொழுதும் எழிலோங்க, உங்கள் முகத்திற்கு இருவகை க்ரீம்களின் நித்திய பராமரிப்பு அவசியம் - ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரத்யேக காரியத்திற்காகவுள்ளது. முதலாவது—அழகிற்கு பரிசுத்தமே முதன்மையாக கவனிக்கப்படவேண்டு மாதலால்—நேர்த்தியாகக் கலவைசெய்ததும் ஊடுருவி உட்செல்லுவதுமான தைலங்களடங்கிய பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம், மயிர்க்கால்களில் படிந்து கிடக்கும் அழுக்கை வெளியேற்றி முகத்தை மழமழப்பாக்க. இரண்டாவது மெல்லிய மெழுக்கற்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம், அதிருசியமாக இருந்து பகல் முழுதும் வெய்யில் தாக்கின்ற முகத்தைப் பாதுகாக்க.

பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமால் பிரதி இரவும் முகத்தை சுத்தம் செய்யுங்கள். முகத்திலும் கழுத்திலும் நிறைய தடவி, சொற்ப நிமிஷம் நன்கு தேயுங்கள். துடைத்துக்கொள்ளவும். தொடர்ந்து நான் இப்படி பராமரித்தீர்களானால், உங்கள் வதனம் என்றுமிலாப் புதுமை வாய்ப்பது நிச்சயம்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமால் தினம் காலையில் முகத்தைப் பாதுகாருங்கள். மெல்லிய மெழுக்கற்ற இந்த க்ரீமை லேசாகத் தடவுங்கள். அது முகமீது அதிருசியமாக இருந்து, வெப்பம் அழுக்கு முதலியவற்றினின்று முகத்தைக் காப்பாற்றி அன்றலர்ந்த மலரென சோபிக்கச் செய்கிறது. பரீக்ஷித்துப் பாருங்கள்!

# பாண்ட்ஸ்







வியாபார விவரங்களுக்கு: எல். டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை - கோலா கோலா - காராச்சி - கொழும்பு - ரங்கூன்.



# புது வாழ்வு

தாழையடி சபாரத்தினம்

தோஷமாகவே வைத்திருக்க முயன்றேன். அதனால்தான் அன்றும் அவளை நிலா முற்றத்துக்குக் கூட்டிச்சென்றேன். ஆயினும் அவள் தூக்கம் வருகிறதென்று பாசாங்கு செய்தாள்.

"ஏன், அன்னம்! உனக்கு இந்தப் பகல்போன்ற நிலவில் இருக்கச் சந்தோஷமாக இல்லையா?" என்று கேட்டேன்.

"உங்களுக்கு எப்படி இருக்கிறது, அம்மா!" என்று அவள் என்னைத் திருப்பிக் கேட்டாள்.

"எனக்குச் சந்தோஷமாக இல்லாவிட்டால் உன்னையும் இழுத்துக் கொண்டு இங்கே வருவேனா?" என்றேன்.

"அடுத்த மாதம் பதினாறாந் தேதி இந்த நிலவு இன்னும் அழகாக உங்களுக்குத் தோன்றுமல்லவா?" என்று அவள் என்னைக் குறும்பாகக் கேட்டு விட்டுச் சிரித்தாள்.

காரணம் அந்தப் பதினாறாந் தேதி எனக்கு விவாகமாக இருந்ததுதான். எனக்குக் கணவனாக வரப் போகிறவருக்குக் கொழும்பில் ஏதோ வேலை. ஆகவே, "ஏன் அம்மா! விவாகமான பின் நீங்கள் கொழும்புக்குத்தானே போவீர்கள்?" என்று கேட்டாள் அன்னம்.

"ஆமாம்" என்று தலையை அசைத்து விட்டு, "ஏன் அன்னம்! நீ எப்பொழுதாவது கொழும்புக்குப் போயிருக்கிறாயா?" என்று கேட்டேன்.

"போயிருக்கிறேன், அம்மா!"

"இதற்கு முன் கொழும்பில் நீ யாருடைய வீட்டிலாவது வேலை செய்து கொண்டிருந்தாயா?"

"நான் வேலைக்காரியானது உங்களுடைய வீட்டிற்கு வந்த பின்தான், அம்மா!"

"அப்படியானால் நீ எதற்காகக் கொழும்புக்குப் போனாய்?"

"என் அப்பாவோடு போனேன்!"

"உன் அப்பாதான் நீ சிறுமியாக இருந்தபோதே இறந்துவிட்டார் என்றாயே!"




நல்ல நிலவு காய்ந்து கொண்டிருந்தது. சாப்பிட்டுவிட்டு அன்னம்மாவை இழுத்துக் கொண்டு போய் முற்றத்தில் உட்கார்ந்தேன். "எனக்குத் தூக்கம் வருகிறது, அம்மா!" என்று கூறி, தான் கூறியதை நிரூபிப்பது போல் அவன் ஒரு கொட்டாவியும் விட்டான்.

அன்னம்மா எங்கள் வீட்டு வேலைக்கு வந்து ஒரு வருஷமாகிறது. நல்ல அழகி. அதோடு நல்ல குணமும் படைத்தவன். சுமார் இருபது வயதிருக்கும். அவனுடைய தாய் தந்தையர் சிறு வயதிலேயே இறந்து விட்டனராம். சித்தியின் கஷ்டங்களைப் பொறுக்க முடியாமல் தன்னுடைய சொந்த ஊராகிய வவுனியாவிலிருந்து ஓடிவந்து விட்டதாக அவன் எங்களிடம் கூறியிருந்தான்.

"இவன் எங்கேயோ கெட்டுப் போய் ஓடி வந்தவனாகத்தான் இருக்க வேண்டும். இவனுடைய முகத்தைப் பார்த்தால் ஒரு பாவமும் அறியாதவன் போலவா தெரிகிறது?" என்று ஆரம்பித்தாள் என் அம்மா.

"அவன் யாராயிருந்தால் உனக்கென்ன? பிடிக்கா விட்டால் விலக்கி விடுகிறது! எதற்கும் ஒரு மாதம் வேலையில் வைத்துக் கொண்டிருந்துதான் பார்ப்போமே!" என்றார் அப்பா. அதற்கு மேல் அம்மாவும் ஒன்றும் பேசவில்லை.

அன்னம்மானுடைய சுறுசுறுப்பும், கள்ளங் கபடற்ற பேச்சும் எங்களுக்கெல்லாம் ரொம்பவும் பிடித்திருந்தது. அவனை எங்கள் குடும்பத்தில் ஒருத்தியாகவே நாங்கள் பாவித்தோம். பகல் முழுவதும் சிரித்த முகத்தோடு அவன் கலகல வென்று சிட்டுக் குருவியைப் போல் ஓடி ஆடி வேலை செய்வான். 'இவனுக்குக் களைப்பென்பதே கிடையாதோ!' என்று எண்ணி நான் ஆச்சரியப் படுவதுகூட உண்டு.

நானும் அவனும் ஒரே அறையில் படுப்பது வழக்கம். சில சமயங்களில் படுத்துக் கொண்டே அவன் ரஸமான கதைகள் சொல்லுவான். நான் அவனுடைய கதைகளில் சொக்கிப் போய் விடுவேன்.

ஒரு நாள் அவன் ஒரு சுவாரஸ்யமான கதையைச் சொல்லிக் கொண்டிருந்த போது, "கதை சொல்லும் கலையை, உனக்குக் கடவுள் ஒரு வரப் ப்ரசாதமாகவே அளித்திருக்கிறார்!" என்றேன்.

அவன் சிரித்துவிட்டு, "'கதை எழுதுவது மட்டுமல்ல; படித்ததையோ, தெரிந்ததையோ அப்படியே சொல்வதும் ஒரு கலைதான்!' என்று ஓர் ஆங்கில அறிஞர் கூறியிருக்கிறார்!" என்றான்.

அவன் அவ்வாறு சொன்னது என்னைத் தூக்கிவாரிப் போட்டது.

"ஆங்கில அறிஞர் கூறியது உனக்கு எப்படித் தெரியும்?" என்று வியப்புடன் கேட்டேன்.

அவன் பதில் சொல்லாமல் சிரித்தான்.

அதற்குள், "என்னடி, மணி பன்னிரண்டாகிறது, நீங்கள் இன்னும் தூங்கவில்லையா?" என்று அம்மா இரைந்தாள். அதற்குப் பின்தான் இருவரும் அன்று மௌனமாகப் படுத்தோம்.

என்னதான் ஆனந்தமாக அன்னம்மான் சிரித்து விளையாடினாலும் அவனுடைய முகத்தில் துன்பச்சாயல் படர்ந்திருந்தது. ஆனால் அதைப்பற்றி நான் அவனிடம் ஒன்றும் கேட்க விரும்பவில்லை. தாய் தந்தையற்ற ஓர் அபலையின் துன்பத்திற்குக் காரணமும் வேண்டுமா? ஆகவே கூடியவரை நான் அவனைச் சந்

நான் இவ்வாறு சொன்னதும் திடீரென்று அவள் முகம் மாறுதலடைந்தது. கண்கள் திருட்டு விழி விழித்தன. ஆயினும் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "ஆமாம், அம்மா! நான் சிறுமியாக இருந்தபோதுதான் ஒரு முறை அப்பாவுடன் கொழும்புக்குப் போயிருக்கிறேன்!" என்றாள்.

"அப்படியானால் நான் கொழும்புக்குப் போகும்போது உன்னையும் கூட்டிக் கொண்டுதான் போவேன்!" என்றேன்.

அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அதற்குப் பதிலாக ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். "என்னடி, உன் முகம் நிமிஷத்திற்கு நிமிஷம் மாறுகிறதே! உன்மீது அளவு கடந்த பிரியம் வைத்திருக்கும் என்னிடம் கூடச் சொல்ல முடியாத அந்த ரகசியந்தான் என்ன?" என்று கேட்டேன் நான்.

அவள் மௌனமாக என் பக்கம் திரும்பினாள். அவளுடைய அகன்ற விழிகளிலிருந்து கண்ணீர் பொலபொலவென்று உதிர்ந்தது. அந்தப் பரிதாபகரமான முகத்தைப் பார்த்த என் கண்களிலும் நீர் முட்டி வந்து நின்றது. முகத்தை மறு பக்கம் திருப்பிக் கொண்டேன்.

சிறிது நேரம் இருவரும் பேசாமலிருந்தோம். பிறகு அவளே பேச ஆரம்பித்தாள்:

* * *

"அம்மா! நானும் என்னுடைய அன்புக் கணவனோடு புது வாழ்க்கையை ஆரம்பிக்க, முதன் முதலில் என் அம்மாவோடு கொழும்புக்குச் சென்றேன். ஆனால் அந்த அம்மாவே ஆறு மாதங்களுக்குள் என் இன்ப வாழ்வுக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டாள்!" என்றாள் அன்னம்.



மேலே சொல்ல முடியாமல் அவள் தொண்டை கரகரத்தது. விக்கி விக்கி அழுதாள். அன்னம் விவாகமானவள் என்று அறிந்ததும், நான் திகைத்துப் போனேன். இருபது வயதிற்குள் விவாகமாகி அவள் கணவனையும் இழந்து விட்டாளா? — ஐயோ, பாவம்! அவள் தன் கணவனை இழந்ததற்குத் தாய்தான் காரணமென்று வேறு சொல்கிறாளே!— அதன் விவரத்தை அறிய என் உள்ளம் துடித்தது.

"நீ விவாகமானவள் என்று எனக்கு ஏன் முன்னமேயே சொல்லவில்லை?"

"ஒரு சமயம் உங்களுடைய அப்பா, அம்மாவிடம் சொல்லி விடுவீர்களோ என்று பயந்துதான் சொல்லவில்லை!"

"அவர்களிடம் சொல்வதால் உனக்கு என்ன கஷ்டம் வரப் போகிறது?"

"அதென்னமோ அம்மா, என்னுடைய வாழ்க்கையைப் பற்றி யாரும் அறிவதை நான் விரும்பவில்லை."

"அப்படியானால் நானும் அறியக் கூடாதா, அன்னம்? ஏன், உன்னுடைய வாழ்க்கையைப் பற்றி நான் யாரிடமாவது சொல்லி விடுவேனென்று நீ என்னைச் சந்தேகிக்கிறாயா?"

"இல்லை; ஒரு வருடகாலம் உங்களோடு பழகும் நான் உங்களைச் சந்தேகிப்பேனா?" என்று கூறிவிட்டு, அவள் சிறிது நேரம் பேசாமலிருந்தாள். பின் தானாகவே சொல்ல ஆரம்பித்தாள்:

"உண்மையில் என் சொந்த ஊர் வவுனியாதான். ஆனால் தாய் தந்தையர் இறந்துவிட்டார்கள் என்று நான் கூறியது பொய். அவர்கள் இன்னும் உயிரோடுதான் இருக்கிறார்கள். என் தந்தை ஒரு போஸ்ட் மாஸ்டர். வவுனியாவிலிருக்கும் இராமநாதன் கல்லூரியில் நான் கல்வி பயின்று வந்தேன். 'மெட்ரிக்' பாஸ் பண்ணிவிட்டு வீட்டில் கொஞ்ச நாட்கள் சும்மா இருந்தேன். என்னை மேற்படிப்புக்காகக் கொழும்புக்குக் கூட்டிக்கொண்டு போக வருவதாக அப்பா எழுதியிருந்தார். எனக்கும் மேலே படிக்க வேண்டுமென்று ஆசைதான்.

"இதற்கிடையில் ஓர் எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்தது. சுமார் இரவு பதினொரு மணி இருக்கும். யாழ்ப்பாணத்திலிருந்து திரிகோணமலைக்குப் போகும் 'பஸ்' ஒன்று வழியில் நின்றுவிட்டது. பிரயாணிகள் மிகவும் கஷ்டப்பட்டார்கள்.

அந்தச் சமயத்தில் இரண்டு வாலிபர்கள் எங்கள் வீட்டுக்கு வந்து அன்றிரவு தங்க இடம் தரும்படி கேட்டுக்கொண்டார்கள். அம்மா அவர்களை யார் என்று விசாரித்தாள். தாங்கள் இருப்பது யாழ்ப்பாணம் என்றும், இருவருக்கும் கொழும்பில் வேலை என்றும், அநுராதாபுரம் வரை பஸ்ஸில் போகலாமென்று வந்ததாகவும், இடையில் 'பஸ்' நின்றுவிட்டதாகவும் அவர்கள் கூறினார்கள்.

"அம்மா இருவருக்கும் படுக்கைகள் கொடுத்தாள். நான் தேநீர் கொண்டு வந்து கொடுத்தேன். அவர்களில் ஒருவர் அந்தத் தேநீரைப் பேசாமல் வாங்கிக் குடித்தார். மற்றவர், 'தூங்கி எழுந்திருக்கும் போதல்லவா தேநீர் சாப்பிடுவது வழக்கம்? வவுனியாவில் தூங்கும்போது தான் தேநீர் குடிப்பார்களோ!" என்று சொல்லிவிட்டுச் சிரித்தார். எனக்கும் சிரிப்பு வந்து விட்டது. 'என்ன இருந்தாலும் வவுனியா, யாழ்ப்பாணமாகி விடுமா?' என்று கூறிவிட்டு உள்ளே ஓடி விட்டேன்.

"அவர்கள் இருவரும் ஏதோ ஆங்கிலத்தில் பேசிக் கொண்டிருந்தனர். எங்களுடைய வீட்டில் யாருக்கும் ஆங்கிலம் தெரியாதென்று அவர்கள் நினைத்திருக்க வேண்டும். இல்லாவிடில் அவ்விதம் என்னைப்பற்றிப் பேசியிருக்க மாட்டார்கள். 'நான் எப்படியும் இவளைத் தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்றார் ஒருவர். 'போடா பைத்தியமே! உன்னோடு பெண்கள் யாராவது பேசி விட்டால் உடனே கல்யாணம் பண்ணிக் கொண்டுவிட வேண்டும் என்று நினைத்து விடுகிறாய்!' என்றார் மற்றவர்.

"அதற்குள் எனக்குப் பின்னால் அம்மா வரும் காலடிச் சத்தம் கேட்டது. உள்ளே போய்ப் படுத்துக் கொண்டேன். பொழுது விடிந்ததும் இருவரும் எழுந்து தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்கள். எனக்கென்னவோ அவர்கள் பிரிவது துக்கமாயிருந்தது.

"பேச்சு வாக்கில் அப்பாவின் விலாசம் என்ன என்று கேட்டார் அவர்களில் ஒருவர். உடனே அம்மா என்னைக் கூப்பிட்டு அப்பாவின் விலாசத்தை எழுதிக் கொடுக்கச் சொன்னாள். நானும் தயங்காமல் எழுதிக் கொடுத்தேன். இருவரும் போய் விட்டார்கள்.

"மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள். அப்பா 'வவுனியில் தூங்கும்போது தான் தேநீர் குடிப்பார்களோ!' என்று கேட்ட அந்த வாலிபரோடு வந்தார். என் விவாகப் பேச்சு ஆரம்பித்தது.



அதற்கு அடுத்த சில நாட்களுக்கெல்லாம் கல்யாணமும் நடந்தது. என்னைப் போன்ற அதிர்ஷ்டசாலி உலகில் யாரும் இருக்க மாட்டார்கள் என்றே நான் அப்போது நினைத்தேன். புதுக் குடித்தனம் ஆரம்பிப்பதற்கு அம்மாவோடு கொழும்புக்குப் போனேன். என்னுடைய கணவர் வெள்ளவத்தையில் இருந்த ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்திருந்தார். அதில் ஓர் அறையைத் தம் நண்பருக்குக் கொடுத்திருந்தார். அந்த நண்பரின் மேல் என் கணவர் உயிரையே வைத்திருந்தார். அவர்களுடைய அந்நியந்த நட்பைப் பார்க்கும்போது எனக்குச் சந்தோஷமாகவேயிருக்கும். என்னோடு அவருடைய நண்பர் வெகு தாராளமாகப் பழகுவார். அவரைச் சந்தேகிப்பதற்கு அங்கு யாரும் இல்லை.

"இந் நிலையில் என் கணவரையும் அவருடைய நண்பரையும் எப்படியும் பிரித்து விட வேண்டுமென்று அம்மா ஆரம்பித்தாள். 'அவர்கள் ஒருவருக்கொருவர் அன்பாயிருந்தால் உனக்கு என்ன, அம்மா!' என்றேன். 'போடி பைத்தியமே! இப்படிச் சிரித்துச் சிரித்து உங்களை ஏமாற்றி அவன் நன்றாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தானானால், கடைசியில் ஓடும் கையுமாகப் பிச்சைக்குப் புறப்பட வேண்டியதுதான்!' என்றாள் அம்மா. 'அம்மா, நீ பிரம்மப் பிரயத்தனம் செய்தாலும் அவர்களை ஒரு நாளும் பிரிக்க முடியாது!' என்று நான் கண்டிப்பாகக் கூறினேன். 'இல்லை, நான் சொல்வது போல் நீ நடந்து கொண்டால் கட்டாயம் அவர்களைப் பிரித்துவிடலாம்!' என்று கூறி, என் மனதுக்கு ஒவ்வாத ஒரு பொய்யைக் கூறும்படி அவள் என்னைத் தூண்டினாள். 'என் உயிரே போனாலும் நான் அவ்விதம் சொல்ல மாட்டேன்!' என்றேன். அம்மா கோபித்துக் கொண்டு



ஊருக்குப் போய்விட்டாள். என் மனதில் பெரிய போர் மூண்டது. என்னைப் பெற்று வளர்த்து, என்னுடைய நன்மைக்காகவே பாடுபடும் என் தாயார் எனக்குக் கெடுதி நினைப்பாளா? — மனதைத் திடப்படுத்திக் கொண்டு அம்மா தந்த விதையை விதைக்க ஆரம்பித்தேன். ஒரு நாள், 'நான் ஊருக்குப் போகப் போகிறேன்!' என்று அவரிடம் கூறினேன்.

'ஏன்?' என்று கேட்டார் அப்பாவியான என் கணவர்.

'நீங்கள் இல்லாத நேரங்களில் உங்களுடைய நண்பரின் தொல்லையை என்னால் சகிக்க முடியவில்லை!' என்று துணிந்து பழி சுமத்தினேன்.

"அவ்வளவுதான்; 'என்ன!' என்று பயங்கரமான தொனியில் கேட்டார் அவர். அடுத்த நிமிஷம் அவருடைய முகம் வெளுத்துவிட்டது. அதைக் கண்டு என்னுடைய உடல் நடுங்க ஆரம்பித்துவிட்டது. சிறிது நேரம் கழித்து 'உண்மையாகவா?' என்று மெல்லக் கேட்டார். அவருடைய இரண்டு கண்களிலும் நீர் நிரம்பியிருந்தது.

"என்னுடைய நிலைமை தர்மசங்கடமாகப் போய்விட்டது. அந்த நிலைமையிலும் ஒரு நிமிஷம் யோசித்தேன். திடீரென்று ஒரு யோசனை உதித்தது. உடனே, 'உங்களால் நம்ப முடியாவிட்டால் நான் வேண்டுமானால் நிரூபிக்கட்டுமா?' என்று தைரியமாகக் கேட்டேன். அவர் பதில் ஒன்றும் கூறாமல் என்னை உற்றுப் பார்த்தார்.

"நீங்கள் இன்று ஏதோ அவசர காரியமாக எங்கேயோ போவதாக உங்கள் நண்பரிடம் கூறிவிட்டு, உள் வராந்தாவில் போய்ப் படுத்துக்கொள்ளுங்கள். பின்னால் நடப்பதைக் கவனிக்கலாம்!' என்றேன்.

"அவ்விதமே அவர் தம் நண்பரிடம் சொல்லிவிட்டு ரகசியமாகச் சென்று உள் வராந்தாவில் படுத்துக்கொண்டார். நான் அவருடைய நண்பரிடம் போய், 'இன்று நம் ஊர்க் கோவிலில் ஏதோ திருவிழாவாம். வாண விளையாட்டும் இருக்கிறதென்று கேள்விப்பட்டேன். தயவு செய்து வாண விளையாட்டு ஆரம்பிக்கும்போது என்னைக் கொஞ்சம் எழுப்பிவிடுங்கள்; மேல்மாடியில் நின்று வேடிக்கை பார்க்கலாம்!' என்றேன்.

'அதற்கென்ன, நான் விழித்திருந்தால் எழுப்பி விடுகிறேன்!' என்று அவர் கபடமில்லாமல் கூறினார்.

"நான் போய் உள் வராந்தாவில் அவரோடு படுத்துக்கொண்டேன். சுமார் ஒரு மணி நேரம் ஆனபிறகு வாண விளையாட்டு ஆரம்பமாயிற்று. உடனே நாங்கள் படுத்திருக்கும் இடத்தை நோக்கி ஓர் உருவம் வந்துகொண்டிருந்தது. நான் கணவரை மெல்ல எழுப்பினேன். திடீரென்று 'லைட்' ஏற்றப்பட்டது. என் கணவரும் நண்பரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். என்னுடைய நெஞ்சு 'திக், திக்' என்று அடித்துக் கொண்டது.

'நீ இருப்பது எனக்குத் தெரியாது...!' என்று ஆரம்பித்தார் அவருடைய நண்பர்.

"அவ்வளவுதான்; 'தெரிந்திருந்தால், வந்திருக்க மாட்டாயோ? — துரோகி!' என்று இரைந்து கத்திவிட்டு, அப்பாவியான அந்த நண்பரின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்து விட்டார் என் கணவர்.

"பதிலுக்கு வாயைக்கூடத் திறவாமல் அந்த அர்த்தராத்திரியிலேயே வெளியே சென்றுவிட்டார் அவருடைய நண்பர்.

"நாட்கள் சென்றுகொண்டிருந்தன. என் கணவரின் சிரித்த முகத்தைக் காணவில்லை. அவர் ஒரு யந்திரம்போல் ஆபீசுக்குப் போவதும் வருவதும், உண்பதும் உறங்குவதுமாக இருந்தார். ஒரு நாள் இரவு முக வாட்டத்தோடு அவர் ஆழ்ந்த யோசனையில் இருந்தார். நான் மெதுவாக அருகே சென்று, 'என்ன யோசிக்கிறீர்கள்?' என்று கேட்டேன்.

'ஒன்றுமில்லை, அன்னம்! இன்று நான் வரும்போது அவனை வழியில் கண்டேன். ஆனால் அவன் என்னைப் பார்க்கவில்லை. துரும்பாக இளைத்து விட்டான், பாவி! எனக்குத் துரோகம் செய்தவனானாலும் என்னால் அவனை மறக்க முடியவில்லை. அவன் என் பார்வையிலிருந்து மறையும் வரை அவனையே பார்த்துக் கொண்டு நின்றுவிட்டு வந்தேன். அட தெய்வமே! 'உன்னுடைய மனைவி அருந்ததியடா!' என்று அவன் சொன்னதையெல்லாம் உண்மையென்று நம்பி நான் மோசம் போனேனே!' என்று சொல்லி, அவர் கண்ணீர் வடித்தார்.

"என்னால் இந்தச் சோக நாடகத்தைப் பார்த்த பிறகும் சும்மா இருக்க முடியவில்லை. நடந்ததை முதலிலிருந்து கடைசி

வரையில் கூறி, என்னை மன்னிக்கும்படி அவருடைய கால்களைப் பிடித்துக் கொண்டேன்.

"உடனே அவர் பைத்தியக்காரனைப் போல் துள்ளி எழுந்தார். 'நாசக்காரி! உனக்கும் மன்னிப்பா!' — இந்த ஒரு வார்த்தைதான் அவர் வாயிலிருந்து வந்தது. அடுத்த நிமிஷம் அவர் தம் சட்டைப் பையிலிருந்து, இருபத்தைந்து ரூபாயை எடுத்து என் முன்னால் விசி எறிந்து, 'நீ உடனே உன்னுடைய வழி காட்டியான அம்மாவோடு போய்ச் சுகமாயிரு!' என்று கூறிவிட்டு வெளியே போய் விட்டார். இரண்டு நாட்கள் இருந்து பார்த்தேன்; போனவர் திரும்பி வரவில்லை. வீட்டைப் பூட்டிச் சாவியை முன்னால் இருந்தவர்களிடம் கொடுத்து விட்டு ஊருக்குப் புறப்பட்டேன். என் இன்ப வாழ்க்கைச் சூரியனை அஸ்தமிக்கச் செய்த அம்மாவின் முகத்தில் மறுபடியும் விழிக்க நான் விரும்பவில்லை. வவுனியாவில் இறங்காமல் நேராக யாழ்ப்பாணம் வந்தேன். பின்னால் நடந்தவைதான் உங்களுக்குத் தெரியுமே!" என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் அன்னம்.

• • •

பதினொருந் தேதி மெல்ல மெல்ல வந்து சேர்ந்தது. அதற்கு முதல் நாள் இருவர் சேர்ந்தாற்போல் வெளி ஹாலில் வந்து உட்கார்ந்தார்கள். ஜன்னல் திரையை விலக்கி விட்டு மெல்ல எட்டிப் பார்த்தேன். ஒருவர் எனக்குக் கணவராக வரப்போகிறவர். மற்றவர் ......?

அதற்குள் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டு, 'எங்கே என் குட்டு வெளிப்பட்டு விடுமோ!' என்று எண்ணி ஓட எத்தனித்தேன். அன்னந்தான் ஒரு கேலிப் புன்னகையோடு அங்கே காட்சியளித்தாள்.

"இங்கே வாடி! அங்கே, 'அவ'ருடன் உட்கார்ந்திருப்பவர் யார் என்று உனக்குத் தெரியுமா? மெல்லத் திரையை விலக்காமல் பார்!" என்று சொல்லி, அன்னத்தை ஜன்னலருகே இழுத்து விட்டேன்.

அவளும் புன் சிரிப்போடு எட்டிப் பார்த்தாள். அடுத்த நிமிஷம் திடீரென்று 'ஹா......!' என்று அலறிக்கொண்டே அவள் என் கரங்களைப் பற்றிக்கொண்டாள். அவளுடைய அறிவு மயங்கி விட்டது. நான் பயந்துபோய், "அம்மா!" என்று கத்தினேன். ஹாலிலிருந்த இருவரும் உள்ளே ஓடி வந்தார்கள். அம்மாவும் அவர்களுக்குப் பின்னால் ஓடி வந்தாள். எல்லோருடைய கண்களும் தரையில் துவண்டுபோய் விழுந்து கிடக்கும் அன்னத்தின் மீது சென்றன.

"ஹா, அன்னமா!" என்ற வார்த்தை இருவருடைய வாய்களிலிருந்தும் ஏக காலத்தில் வந்தது. நான் ஆச்சரியத்தோடு அவர்களை நிமிர்ந்து நோக்கினேன்.

இதற்கிடையில் தரையில் கிடந்த அன்னம் எனக்குக் கணவராக வரப் போகிறவரோடு வந்திருந்தவரின் மடியில் கிடந்தாள். சிறிது நேரம் கழித்து அவள் கண் விழித்தபோது அவளுடைய உதடுகள் 'சுவாமி, சுவாமி' என்று இரு முறை அசைந்தன.

அம்மா கொடுத்த காப்பியைக் குடித்ததும் அன்னம் கொஞ்சம் தைரியத்தோடு எழுந்தாள். பிறகு, "நீங்களாவது என்னை மன்னிக்க மாட்டீர்களா!" என்று கெஞ்சும் பாவனையில் கேட்டுக் கொண்டே வரப்போகும் என் கணவருக்கு அருகில் சென்றாள்.

"கவலைப்படாதே, அன்னம்! எல்லாவற்றையும் உன் கணவனிடமிருந்து தெரிந்து கொண்டேன். சிறு பிள்ளைத் தனத்தில் எல்லாம் நடந்து விட்டன. அதைக் குறித்து இனி வருந்தி என்ன பயன்?" என்றார் அவர்.

"சரி, இனி நானும் உன்னோடு சேர்ந்து என் 'புது வாழ்க்கை'யை ஆரம்பிக்க வேண்டியதுதான்!" என்றார் அன்னத்தின் கணவர்.

இருவரும் மீண்டும் வெளி ஹாலுக்குச் சென்று விட்டனர்.

"ஏன் அம்மா, அன்னம்! இனிமேல் உன்னை நான் 'அடி, பிடி' என்று கூப்பிட்டால் உனக்குக் கோபம் வருமோ!" என்று கேட்டுவிட்டுச் சிரித்தேன் நான்.

"பிறகு இனி வேறு எப்படிக் கூப்பிடுவதாம்? 'அடி, பிடி' என்று கூப்பிடாமல் 'அம்மா, மகாராணி!' என்று கூப்பிடுவார்கள்!" என்று சொல்லி விட்டு, அன்னமும் என்னுடைய சிரிப்பில் கலந்துகொண்டாள்.



# கம்பர் தரும் காட்சி



டி. கே. சி.

## 222. வாயு பகவானது அருள்

சீதை அனுமனை வாழ்த்தி முடித்தாள். அனுமனும் ராமன் பட்ட கஷ்டங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லுகிறான்:

"மாரீசனைக் கொன்றுவிட்டு ராமபிரான் ஆசிரமத்துக்குத் திரும்பினான். உன்னைக் காணவில்லை. அங்கு தேடினான், இங்கு தேடினான். பைத்தியமே பிடித்துவிட்டது. தம்பி லக்ஷ்மணன் அண்ணனை ஒருவாறு தேற்றினான். மேலும் தேடுவதற்காக இருவரும் தெற்கு நோக்கிப் புறப்பட்டார்கள்.

"வருகிற வழியில் ஜடாயுவைச் சந்தித்தார்கள். அவனோ உயிர் போகும் தறுவாயில் இருந்தான். ஏதோ அரக்கர்களால் வந்த வினை இது என்று விஷயத்தை ஜடாயு சொல்ல ஆரம்பித்தான். ஆரம்பித்ததும் அவனுக்கு உயிர் போய்விட்டது.

"ராம லக்ஷ்மணர்கள் ஜடாயுவுக்கான ஈமக்கடனைச் செய்துவிட்டுக் கிஷ்கிந்தைக்கு வந்தார்கள்.

"கிஷ்கிந்தையில் எங்கள் அரசன் சுக்கிரீவனோடு சினேகங் கொள்ள நேர்ந்தது. அது காரணமாக வாலியைக் கொல்லவும் நேர்ந்தது. ஆனாலும் இறக்கும் தறுவாயில் வாலியானவன் தன் மகன் அங்கதனையும் சுக்கிரீவனையும் ராமனுக்கு அடைக்கலமாக ஒப்படைத்தான்.

"வானர சேனைகள் எல்லாம் ராமனுடைய சேனையாக இருந்து சேவை செய்கின்றன."

அனுமன் இவ்வாறெல்லாம் நிகழ்ந்ததை எடுத்துச் சொன்னான்.

"அடடா! நாயகன் ராமன்தான் எவ்வளவு கஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கிறான்" என்ற எண்ணம் அவள் மனசைத் தாக்கியது.

அன்பினன் இவ்வுரை
உணர்த்த, ஆரியன்
வன்பொறை நெஞ்சினன்
வருத்தம் உன்னுவான்;—
என்புற உருகினள்
இரங்கி ஏங்கினள்
துன்பமும் உவகையும்
சுமந்த உள்ளத்தாள்

[அன்பினன் இவ்வுரை உணர்த்த: அனுமன் இந்தவிதமாக எடுத்துச் சொல்ல: ஆரியன்: ராமன்: வன்பொறை நெஞ்சினன் வருத்தம் உன்னுவான்: தாங்க முடியாத துயரத்தால் இடிகிற நெஞ்சினனான ராமனது வருத்தத்தை எண்ணிப் பார்த்தான் — அந்த எண்ணத்தை அவனால் தாங்க முடியவில்லை; என்பு உற உருகினள்: எலும்பே உருகிவிட்டது என்று சொல்லும்படி உள்ளம் உருகினாள்: இரங்கி ஏங்கினள்: சோர்ந்து வாய்விட்டு ஏங்கினாள்; துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்: எல்லையில்லாத வருத்தத்துக்கு ராமன் உள்ளானே என்று எண்ணியதில் துன்பந்தான். ஆனாலும் அடுத்த நிமிஷத்தில் தன்னை எவ்வளவாக இதயத்தில் வைத்துப் பாராட்டியிருக்கிறான் ராமன், என்ற எண்ணம் ஒரு மகிழ்ச்சியைக் கொடுத்தது.]

***

சீதைக்கு மனசு நைகிறது. கண்ணிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகிறது. துன்பமாகிய பெரு வெள்ளத்தில் ஒரு பெருஞ் சுழி. அந்தச் சுழியில் இழுபட்ட அவள் இதயம் இப்படியும் அப்படியுமாகத் திண்டாடுகிறது. ஆனாலும் ஒரு தைரியம் பிறக்கிறது. அது காரணமாக அனுமனிடம் பேச ஆரம்பிக்கிறாள்:

நைபுறு சிந்தையள்,
நயன வாரியள்,
தொய்யல்வெஞ் சுழியிடைச்
சுழிக்கும் நெஞ்சினள்,—
'ஐய நீ அளப்பரும்
அளக்கர் நீந்தினை
எய்திய(து) எப்பரி(சு)
இயம்பு வாய்' என்றாள்.

[நயன வாரியன்: கண்ணீர்ப் பெருகியவனாய்; தொய்யல் வெம் கழிவிடைக் கழிக்கும் நெஞ்சினன்: துன்பமாகிய வெள்ளத்துக் கழியில் இழுபட்டுத் திண்டாடும் நெஞ்சினனாய்; ஐய நீ அளப்பரும் அளக்கர் நீந்தினை எய்தியது: ஐயனே! அளக்க முடியாத சமுத்திரத்தை நீந்திக் கொண்டு இவ்விடம் அடைந்தது; எப்பரிசு இயம்புவாய்: எந்த விதமோ தெரியவில்லையே, சொல்ல வேண்டும் என்றான்.]

எப்படி நீந்தி இங்கு வந்தாய் என்ற சீதையின் கேள்விக்கு உத்தாரம் சொல்லுகிறான் அனுமன்.

ராமனது திருவடியின் அருளை நன்கு பெற்ற ஞானிகள் மாயையாகிய பெருங் கடலைக் கடந்து போய் விடுகிறார்கள்.



'கருங்கிடை உன்ஒரு
துணைவன் தூயதாள்
ஒருங்குடை உணர்வினோர்
ஓய்வில் மாயையின்
பெருங்கடல் கடந்தனர்
பெயரும் பெற்றிபோல்
கருங்கடல் கடந்தனென்
காலி னால்' என்றான்.

[கருங்கிடை: ஒடுங்கிய இடையாளான பிராட்டியே; உன் ஒரு துணைவன தூயதாள்: உன்னுடைய ஒப்பற்ற நாயகனான ராமனது திருவடியை (அருளை); ஒருங்கு உடை உணர்வினோர்: முழுதும் அனுபவித்த ஞானிகள்; ஓய்வு இல் மாயையின் பெருங்கடல்: விடாது அமிழ்த்திக் கொண்டே வரும் மாயையாகிய பெருங் கடலை; கடந்தனர் பெயரும் பெற்றி போல்: கடந்து நீங்கும் தன்மை போல; கருங் கடலைக் கடந்தனென்: இந்தக் கருங் கடலைக் கடந்து வந்தேன்; காலினால் என்றான்: வாயு பகவானுடைய அருளினால்—அனுமன் வாயு புத்திரன்; வாயு பகவானிடத்தில் பக்தியுள்ளவன்.]

"ஒடுங்கிய இடையை உடையவளே!" என்று அனுமன் வாயினால் சொல்லவில்லை. ஆனால் அவனுடைய பக்தி இதயம் கண்டு களிக்கிற காட்சி தான். இதயத்தில் நிகழ்கிறதை எடுத்துச் சொல்லுவது கவிஞர்களின் உரிமை மாத்திரம் அல்ல, கடமையுங் கூட. கடவுள் அருளால் பிறவியாகிய மாயையைக் கடக்கிறார்கள் என்று சொல்லி ராமனுக்குக் கடவுள்த் தத்துவத்தை ஏற்றி உபசரித்து இருக்கிறது. அன்பின் வேகம் அது. சூரியனை வழிபடுதல், அக்கினியை வழிபடுதல், வாயுவையும் அக்காலத்தில் வழிபட்டு வந்தார்கள். அதாவது வாயுபகவானை வழி பாட்டுக்குரிய ஒரு தெய்வமாகக் கருதி வந்தார்கள்.




### ஆடலும் பாடலும்!

"ஏன் அப்பா! உன்னிடம் அன்று ஒரு கிளி வாங்கிக்கொண்டு போனேனே, அது நன்றாய்ப் பாடும், ரொம்பப் புத்தி கூர்மையுள்ள கிளி யென்று சொன்னாயே! அதற்கு ஒரு கால் ஊனமோ? நொண்டு கிறதே, அப்பா!"

"அப்படியானால் உங்களுக்கு லாபம் தானே? நீங்கள் வாங்கிய கிளிக்குப் பாடத் தெரிவதுடன் ஆடவும் தெரிகிறது, இல்லையா?"

★

### பேஷ்!

பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் புதிதாக வந்த ஸூப்பரிண்டெண்டிடம் அந்த ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறும் பைத்தியக்காரன் ஒருவன் வந்தான்.

பைத்தியக்காரன் :— ஸார்! முன்பு இருந்த ஸூப்பரிண்டெண்டுகளை யெல்லாம் விட உங்களிடம்தான் எனக்கு ரொம்பப் பிரியமாயிருக்கிறது.

ஸூப்பரிண்டெண்டு (ஆச்சரியத்துடன்) :- ஏன் அப்படி?

பைத்தியக்காரன் :—உங்களைப் பார்த்தால் என்னைச் சேர்ந்தவர்கள் மாதிரியே இருக்கிறது; அதனால்தான்!

★

### ரஸிகர்!

ராமு :—நான் கதாநாயகனாக நாடகத்தில் நடித்தேனே, அன்றைக்கு நீ தானே முதல் வரிசையில் உட்கார்ந்துகொண்டு 'உஸ், உஸ்' என்று சத்தம் போட்டுக் கலாட்டா பண்ணினாய்?

சுந்தரம் :—இல்லை, அப்பா! இரண்டு காரியங்களை ஒரே சமயத்தில் எப்படிச் செய்ய முடியும்? நான்தான் அன்று தூங்கிக்கொண் டிருந்தேனே!



### பொறுப்புள்ளவன்!

மானேஜர் (வேலை கேட்க வந்திருக்கும் பையனைப் பார்த்து) :—நான் ஒரு பொறுப்புள்ள பையனைத்தான் என்னிடம் எப்போதும் வேலைக்கு வைத்துக்கொள்ள விரும்புகிறேன்.

பையன் :—அப்படியானால் ரொம்ப நல்லதாய்ப் போயிற்று, ஸார்! நான் ரொம்பப் பொறுப்புள்ளவன். இதற்கு முன் வேலை பார்த்த இடங்களில் எல்லாம் ஏதாவது தவறுதல் ஏற்படாமல் இருந்ததில்லை. அந்தத் தவறுதலுக்கு நான்தான் பொறுப்பு என்று அவர்கள் சொல்லியிருக்கின்றனர்!

★

### அடாடா!

ஒரு கிராமத்தில் மோட்டார் விபத்தினால் பலத்த காயமடைந்த ஒருவர் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்துவிட்டார். காரை ஓட்டிக் கொண்டு வந்த பெரிய மனிதர் பரபரப்புடன் காரை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கிப் பார்த்தார். பக்கத்தில் இருந்த கிராமவாசி கீழே விழுந்தவரையும் காரை ஓட்டி வந்த பெரிய மனிதரையும் பார்த்துக் கொண்டு அசைவற்று நின்றான்.

பெரிய மனிதர் (கோபத்துடன்):—ஏன் அப்பா, ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய் நிற்கிறாய்? இந்தக் கிராமத்து வைத்தியரை உடனே அழைத்துக் கொண்டு ஓடி வா! போ! போ, சீக்கிரம்!

கிராமவாசி :—அது எப்படிங்க முடியும்? அந்த வைத்தியருதானே உங்கக் காரிலே அகப்பட்டுக் கிட்டாரு!

★

### நடக்காத விஷயம்!

மாஜிஸ்ட்ரேட் (குற்றவாளியைப் பார்த்து) :—நீயும் உன் தம்பியும் கடுமையாகச் சண்டை போட்டதாக வழக்கு நீ உன் தம்பியை அடித்து விட்டாயாமே! அன்றைக்கு உங்கள் இருவருக்கும் என்ன நடந்தது என்பதை விவரமாகச் சொல்லு.

குற்றவாளி :—என்னுங்க, அப்படிக் கேட்கிறீங்க! ஒன்றும் நடக்கவில்லைங்க. ஆனால் விறகுகளும், அரிவாள்களும் பறந்துகொண் டிருந்தாங்க!

ஸ்டேன்ஸ் காப்பி உங்கள் பணத்துக்
குத் தகுந்த பிரதி பலனைக் கொடுக்கும்

# Stanes

## சிவப்பு லேபிள் கலப்பற்ற காப்பி

3, 7, 14, 20 பவுண்டு
டின்களில் கிடைக்கும்




தாங்களே பொடி செய்து கொள்ள விரும்புபவர்களுக்கும் பொறுக்கி வறுத்த ஸ்டேன்ஸ் காப்பிக் கொட்டையும் கிடைக்கும்.

எதிர்பாராத காரணங்களால் சில சமயங்களில் ஸ்டேன்ஸ் காப்பிப் பொடியும் வறுத்த காப்பிக் கொட்டையும் போதுமான அளவு வியாபாரிகளுக்குக் கிடைக்காவிட்டால் அதைப்பற்றிப் பொருட்படுத்தக் கூடாதென்று கேட்டுக் கொள்கிறோம். காலி டின்களைத் திருப்பி அனுப்புவது போதிய அளவு சரக்குகள் கிடைக்க அநுகூலமாயிருக்கும்.

ஏஜண்டுகள்:
ஸ்ரீ கரணம் ஹனுமந்த ராவ், மர்ச்சண்ட்,
காக்கிநாடா
ஸ்ரீ எஸ். வீஎச். மல்லப்ப ராஜு,
பெஜவாடா




STC. 1480




# விசித்திர வழக்கு

பி. எஸ். மணி

மணிபுரியை ரகுவர்மன் என்ற அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவனுடைய நாடு சீரும் சிறப்பும் பெற்று விளங்கியது. மணிபுரி நியாயத்துக்கும் நேர்மைக்கும் சிறந்து விளங்கியது. அதற்குக் காரணம் பிரதம நீதிபதி சத்தியசந்தர்தான்.

சத்தியசந்தர் சிறு வயதிலேயே சிறந்த கல்விமானாக இருந்தார். எந்த விஷயத்தையும் ஆராய்ந்து அறியும் ஆற்றல் அவருக்கு இருந்தது. அவரது புத்தி வன்மையை அறிந்த ரகுவர்மனின் தந்தை அவருக்கு நாட்டின் பிரதம நீதிபதி பதவியை அளித்தார். சத்தியசந்தரும் நியாயந் தவறாமல் நீதி வழங்கி வந்தார். அவரை நாடு முழுவதும் புகழ்ந்தது. அவரது புகழ் பக்கத்துத் தேசங்களிலும் பரவியிருந்தது.

ஒருவர் சீரும் சிறப்பும் புகழும் பெற்று விளங்கினால் அவரைக் கண்டு சிலர் பொறாமைப் படுவது இயற்கையல்லவா? அதே மாதிரி சத்தியசந்தரிடமும் சிலர் பொறாமை கொண்டு அவரை எப்படியாவது வேலையை விட்டு விலக்கிவிட வேண்டுமென்று எண்ணினர். ஏன் தெரியுமா? சத்தியசந்தர் சத்தியத்தைக் காப்பாற்றும் பொருட்டு, அம் மனிதர்களுக்கு விரோதமாகச் சில வழக்குகளில் தீர்ப்பளித்தார். ஆகவே, அரசனிடம் சென்று சத்தியசந்தரைப்பற்றி இல்லாததும் பொல்லாததுமாகக் குறை கூறினார்கள்.

ஒரு நாள் நீதிமன்றத்தில் ஒரு விசித்திரமான வழக்கு வந்தது. இரண்டு பேர் பிரதம நீதிபதி சத்தியசந்தரிடம் வந்து தங்கள் வழக்கை முறையிட்டனர். இருவர்களில் ஒருவன் வியாபாரி; மற்றொருவன் தேசாந்திரி.

நீதிபதி இருவரையும் தங்கள் வழக்குகளைக் கூறும்படியாக வேண்டிக் கொண்டார். வியாபாரி முதலில் தனது வழக்கை எடுத்துரைத்தான்.

“ஐயா! நான் ஒரு வியாபாரி. காலையில் உலாவுவதற்காக நகரத்தை விட்டு நான் குதிரையில் சென்று கொண்டிருந்தேன். திரும்பி வரும்போது இம் மனிதன் சோர்வுடன் வந்து, ‘ஐயா! எனக்கு ரொம்பக் களைப்பாயிருக்கிறது. ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. என்னை நகரம் வரை உங்களுடன் அழைத்துச் சென்றால் கோடி புண்ணியமுண்டு’ என்றான். அவனது வார்த்தை என் மனத்தை இளகச் செய்தது. உடனே அவனைக் குதிரையில் ஏற்றிக்கொண்டு நகரம் வரையில் சென்றேன். நகரம் வந்ததும் அவனை இறங்கும்படி வேண்டினேன். ‘மாட்டேன்! குதிரை என்னுடையது!’ என்கிறான். இந்த

வழக்கை நீங்கள்தான் விசாரித்து நீதி வழங்க வேண்டும்" என்று சொல்லி முடித்தான் வியாபாரி.

"உன்னுடைய வழக்கு என்ன?" என்று கேட்டார் நீதிபதி தேசாந்திரியைப் பார்த்து.

"ஐயா! நான் ஒரு தேசாந்திரி. இந்த நாட்டைச் சுற்றிப் பார்க்கலாமென்று வந்தேன். இந்த மனிதன் பணம் தருகிறேன் என்று சொல்லித் தன்னைக் குதிரையில் ஏற்றிச் செல்லும்படி வேண்டினன். நானும் ஏற்றி வந்தேன். இப்பொழுது தன்னுடைய குதிரை என்கிருன்!" என்ருன் தேசாந்திரி.

"சரி; நீங்கள் இருவரும் வழக்கைக் கூறி விட்டீர்கள். குதிரை என்னிடம் இருக்கட்டும். நீங்கள் காலையில் வாருங்கள், வழக்கின் முடிவைக் கூறுகிறேன்" என்ருர் சத்தியசந்தர்.

மறுநாள் காலையில் இருவரும் குறிப்பிட்ட நேரத்தில் வந்து சேர்ந்தார்கள். சத்தியசந்தர் வழக்கின் முடிவைக் கூறினர். "இந்தக் குதிரை வியாபாரியைச் சேர்ந்தது. தேசாந்திரி என்று சொல்லி வந்தவனுக்கு ஒரு வருஷம் சிறைத் தண்டனை!" என்று அவர் தீர்ப்பளித்தார். தேசாந்திரியின் முகம் கறுத்தது. காவலாளிகள் அவனைச் சிறைக்கு இழுத்துச் சென்ருர்கள். வியாபாரி சிறிது நேரம் கழித்து நீதிபதி சத்தியசந்தரிடம் சென்று, "ஐயா!, தாங்கள் எவ்வாறு இவ் வழக்கின் முடிவைக் கூறினீர்கள்?" என்று ஆச்சரியம் தாங்க மாட்டாமல் கேட்டான்.

நீதிபதி, "வியாபாரியே! உன்னிடம் காலையில் வழக்கின் முடிவைக் கூறுகிறேன் என்று சொன்னேனல்லவா? காலையில் நீங்கள் வரும் வேளையில் குதிரையை உங்கள் இருவருக்கும் எதிராக ஒருவனைப் பிடித்திருக்கச் செய்து தூரத்தில் நின்று கவனித்தேன். அந்தத் தேசாந்திரி வரும்போது குதிரை பேசாமல் நின்றது. நீ வந்தபோது குதிரை தன் தலையை ஆட்டி அத்து மீறிக்கொண்டு உன்னிடம் வர எத்தனித்தது. இதிலிருந்து நீதான் எஜமானனாக இருக்க வேண்டுமென்று முடிவு செய்தேன்" என்ருர்.

வியாபாரி மகிழ்ச்சி பொங்க, "நீங்கள்தான் நாட்டின் தலை சிறந்த நீதிபதி. சத்தியத்தின் உறைவிடம்" என்று மனமார வாழ்த்திவிட்டுக் குதிரையையும் ஓட்டிக் கொண்டு சென்ருன்.

அடுத்த நாள் காலை நீதிபதிக்கு ஒரு விலையுயர்ந்த மோதிரமும் ஓர் ஓலையும் வந்தது. நீதிபதி சத்தியசந்தருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. சந்தோஷத்துடன் ஓலையைப் பிரித்துப் படிக்தார்:

மதனகிரி அரண்மனை.

நீதிபதி அவர்களுக்கு,

நேற்று வியாபாரியாக வந்து வழக்கில் வெற்றி பெற்றுக் குதிரையை அடைந்தவன் நானே. தற்செயலாக உலாவச் செல்லும்போது ஒரு திருடன் தன்னை ஏற்றிச் செல்லும்படி மன்ருடினன். அவனைக் குதிரையில் ஏற்றிக் கொண்டு வந்தேன். கடைசியில் அவன் குதிரையைத் தன்னுடையது என்ருன். வெகுநாளாகத் தங்களைப் பரிசோதிக்க விரும்பினேன். அதனலேயே வழக்கை நியாய சபைக்கு எடுத்து வந்தேன். நேற்று தங்களுடைய நியாயத்தின் நேர்மையையும் அறிவின் விசாலத்தையும் கண்டேன். தாங்களே இந்த நாட்டின் தலை சிறந்த நீதிபதி. தங்களுக்குப் பரிசாக இந்த விலையுயர்ந்த மோதிரத்தை அனுப்பியுள்ளேன். பெற்றுக் கொள்ளவும்.

மதனகிரி அரசன்—ரகுவர்மன்.



இந்தச் செய்தி நாடு முழுவதும் பரவியதும் நீதிபதி சத்தியசந்தரின் புகழ் இன்னும் ஒரு படி உயர்ந்தது. இதற்குப் பிறகு அரசன் அவரைப் பற்றி யார் என்ன சொன்னலும் அதைக் கொஞ்சமும் நம்புவதில்லை.

# அடிமை வாழ்வைத் தகர்த்த புரட்சி பூகம்பங்கள்

— ஜெயமணி —

## 3. பிரான்ஸ்

உலக சரித்திரத்திலே 1789-ம் வருஷம் எவரும் மறக்க முடியாததாகும். அதற்கு முன் பற்பல நாடுகளின் விதியை நிர்ணயிக்கும் அரசியல் புரட்சிகள் ஏற்பட்டன என்றாலும், பிரஞ்சுப் புரட்சியைப் போல் உலக ஜனங்களின் கவனத்தை ஆகர்ஷித்த அரசியல் பூகம்பம் வேறு எதுவும் இல்லை எனலாம்.

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற மூன்று மகத்தான கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு பிரஞ்சுப் புரட்சி ஆரம்பமானதே அதற்குக் காரணம். ஒரு காலத்தில் முடியரசுக்கு முன்னுதாரணமாக விளங்கிய பிரான்ஸ், பிறகு பிரான்ஸில் மாத்திரமல்ல, மற்றும் பல நாடுகளிலும் முடியரசு அழிவதற்கும் குடியரசு அமைவதற்கும் வழிகாட்டியது!

பிரஞ்சு ஜனங்கள் பட்டினியினாலும் பிணியினாலும் பரிதவித்து வந்த அதே சமயத்தில், பிரஞ்சு மன்னர் மாளிகையில் ஆடியும் கூத்தும் பிரமாதமாக இருந்தன. மன்னர் வர்க்கம் ஏழை ஜனங்களை வெறுத்தது. ஜனங்களோ மன்னர் வர்க்கத்தை முன்னிலும் வெறுத்தனர்.

அதே சமயத்தில் வால்டேர், ரூஸோ போன்ற அரசியல் இலக்கிய மேதாவிகளும் உயர்ந்த கருத்துக்களைப் பிரஞ்சு ஜனங்களின் உள்ளத்தில் வளர்த்து வந்தனர். எனவே ஜனங்களின் இருதயத்திலிருந்து இருள் நீங்கிக் கொஞ்சம் பிரகாசம் ஏற்படத் தொடங்கியது. இருதயத்தில் பிரகாசம் ஏற்பட்டதும் நெஞ்சில் உறுதி உண்டாயிற்று. கஷ்டங்களைச் சகித்துக் கொண்டு வாளாவிருக்கும்



ரோபஸ்பியர்

கோழை வாழ்வைக் காட்டிலும், அவற்றை உடைத்தெறிவதில் மரணம் அடையும் வீர வாழ்வே மேலானது என்று ஜனங்கள் முடிவு செய்தனர்.

வீதிகளில் சகிக்க முடியாத வறுமை வாழ்வையும் அதையடுத்த மாளிகையில் எல்லையற்ற போக வாழ்வையும் நேருக்கு நேராகக் கண்ட பிரஞ்சு ஜன சமூகம் பொங்கி எழுந்தது. பிரஞ்சு ஜனங்களின் துன்பத்துக்கும் பிரஞ்சு மன்னரின் கொடுங்கோன்மைக்கும் அறிகுறியாக விளங்கிய பாஸ்டில் சிறையை ஜனங்கள் தவிடு பொடியாக்கிச் சுதந்திர யுகப் பிரகடனம் செய்தனர். (பாஸ்டில் சிறையைத் தகர்த்த சம்பவம் பிரான்ஸில் இன்றளவும் வருஷா வருஷம் முக்கிய விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.)

பின்னர் நிகழ்ந்த புரட்சியில் ஜனங்களின் கையே ஓங்கி நின்றது. அப்போதாவது பிரஞ்சு மன்னன் தன்னுடைய அட்டூழியங்களையும் துரோக மனப்பான்மையையும் விட்டு ஒழித்திருந்தால், பிரான்ஸில் முடியரசுத் தப்பிப் பிழைத்திருக்கலாம். முடியரசுத் தப்பாவிட்டாலும் பதினாறாவது லூயி மன்னனின் தலையாவது தப்பியிருக்கலாம். ஆனால் அந்த இரண்டும் தப்பவில்லை!

### வாழ்க சுதந்திரம்!

மதிகெட்ட அந்த மன்னனின் செய்கை காரணமாகப் பிரான்ஸில் முடியரசு மறைந்து குடியரசு ஏற்பட்ட உடனே பாலும் தேனும் வழிந்து ஓடவில்லை. முடியரசு மகத்துவத்தில் மூழ்கிக் கிடந்த ஐரோப்பா முழுதும், பிரான்ஸின் செய்கையைக்

நெதர்லண்ட்ஸின் அடிமைத் தனத்தை ஸ்திரமாகச் செய்வதற்காக ஸ்பெயின் மன்னன், ஆல்வா பிரபுவை நெதர்லண்ட்ஸ் கவர்னர் ஜெனரலாக அனுப்பினன். ஆசியாவில் செங்கிஸ்கானும் தைமூரும் செய்த அட்டூழியங்களைப் போல் ஆல்வாபிரபுவும் நெதர்லண்ட்ஸில் செய்ய முற்பட்டான். அவனுடைய கோஷ்டியினருக்கு ஜனங்களின் உயிர் கிள்ளுக் கீரையாக இருந்தது. ஆல்வாவின் அக்கிரமத்தினால் பல நகரங்கள் பாழாயின. மிகுந்த பயிற்சி பெற்ற அவனுடைய துருப்புகளுக்கு முன்னிலையில் ராணுவப் பயிற்சியற்ற நெதர்லண்ட்ஸ் ஆடவர்களும் பெண்களும் என்ன செய்ய முடியும்? எனினும் அவர்கள் அதற்காக அதைரியமடையவில்லை. உடலில் பலம் உள்ள வரையில் போராடினார்கள். பிறகு பின்வாங்குவது என்ற பேச்சின்றிப் போர்க்களத்திலேயே வீழ்ந்து மடிந்தார்கள்.



மாஜினி

ஹாலந்து சமுத்திர மட்டத்துக்குக் கீழ் உள்ள தேசமாதலால் கடல் ஜலத்தினால் கஷ்டம் ஏற்படாமல் இருப்பதற்காகச் சுற்றி அணைச் சுவர் இருக்கிறது. அதை உடைத்து விட்டால் அத்தேசத்தின் ஒரு பெரும் பகுதி வெள்ள மயமாகி விடும். ஸ்பெயின் துருப்புகளை எதிர்த்து அக் காலத்தில் நெதர்லண்ட்ஸ் ஜனங்கள் அந்தத் தந்திரத்தைக் கையாண்டார்கள். சென்ற மகா யுத்தத்தின் போதும் ஹிட்லரின் சைன்யங்களை மூழ்கடிப்பதற்காக நெதர்லண்ட்ஸ் சர்க்கார் மேற்படி அணைகளை உடைத்து விட்டது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம்.

### "ஊழித் தீயில் பிரவேசிப்போம்!"

அது மாத்திரமா? ஸ்பெயினுடன் யுத்தம் செய்த காலத்தில் உண்ண உணவு கிடைக்காததால் நெதர்லண்ட்ஸ் தேசபக்தர்கள் மர இலைகளைத் தின்றனர். எச்சில் இலைகளுக்காக நாய்களுடன் சண்டையிட்டனர்!

"இலைகள் கிடைக்காவிட்டால் எங்களுடைய இடது கையை வெட்டித் தின்று வலது கையால் எங்களுடைய சுதந்திரத்தையும் பெண்மணிகளையும் காப்பாற்றுவோம். நாங்கள் அடியோடு அழிந்து போக வேண்டும் என்பது ஆண்டவனின் சித்தமாயின், அதற்காகவும் நாங்கள் அஞ்சப்போவதில்லை. கடைசி வரையில் போர் புரிந்துவிட்டு எங்கள் நகரங்களுக்குத் தீ வைப்போம். அந்த ஊழித் தீயில் பெண்டு பிள்ளைகளுடன் பிரவேசிப்போமேயன்றி, உங்களிடம் சரண் அடையோம்" என்று நெதர்லண்ட்ஸ் மக்கள் வீர கர்ஜனை புரிந்தனர்.

கடற்கரையைச் சுற்றியுள்ள அணைக் கட்டுகள் ஒவ்வொன்றாக உடைக்கப்பட்டன. பேரிரைச்சலுடன் பெரு வெள்ளம் வந்தது. பல வருஷங்களாக நடந்த போரில் சிறிதும் பின் வாங்காத ஸ்பெயின் துருப்புகள் புதிய விரோதியைக் கண்டு, அதாவது பொங்கி வந்த கடல் வெள்ளத்தைக் கண்டு ஓட்டம் பிடித்தனர்!

பல வருஷங்கள் சுதந்திரப் போர் புரிந்த பின்தான் ஹாலந்து சுதந்திரம் பெற்றது. மேற்படி சுதந்திர யுத்தத்தில் ஹாலந்து வெற்றி பெறுவதற்கு முக்கிய புருஷராக விளங்கிய வில்லியம் ஆரேஞ்ச் என்ற தலைவரைக் கொல்ல ஸ்பானியர்கள் கூலிக்காரர்களைக் கொண்டு முயற்சித்தனர். அவர்களுடைய முயற்சி ஐந்து தடவை தோல்வியடைந்தது. ஆனால் ஆறாவது தடவை அவர்கள் வெற்றி பெற்றனர். எனினும் ஹாலந்து சுதந்திரம் பெற்று விட்டதால், வில்லியம் கொலையுண்டது அந்தத் தேசத்துக்குப் பெரும் கஷ்டத்தை உண்டுபண்ணியதேயன்றி, அதன் சுதந்திரத்துக்கு ஆபத்து விளைவிக்கவில்லை.

## 5. இத்தாலி

ஒரு குறிப்பிட்ட தேசத்தைப் பற்றி எண்ணும்போதும் எழுதும்போதும் அத்தேசத்தைப் பல்வேறு இன்னல்களிலிருந்தும் காப்பாற்றி உருவாக்கிய அதன் மூல கர்த்தாக்கள் நம் கண்முன் தோன்றுகின்றனர் அல்லவா? இந்தியாவில் காந்திஜியும், சீனாவில் ஸன்யாட் சென்னும், அமெரிக்காவில் வாஷிங்டனும், ருஷ்யாவில் லெனினும் அத்தகைய முக்கிய கர்த்தாக்கள் என்பது உலகம் முழுவதும் ஒப்புக்கொண்ட உண்மை. அதுபோலவே இத்தாலியைப் பற்றிக் குறிப்பிடும் போது மாஜினி,

கரிபால்டி, காவூர் இந்த மூன்று தலைவர்கள் நமது கண் முன் தோன்றுகின்றனர். அவர்கள் இத்தாலியை விடுவித்த மும்மூர்த்திகள் என்று சரித்திரம் கூறுகிறது.

மாஜினி இத்தாலியின் தீர்க்கதரிசி. சிதறிக் கிடந்த இத்தாலியர்களின் தேசவெறிக்கனல் பெரும் ஜ்வாலையாகி அணையாமல் இருந்ததற்குக் காரண புருஷரும் மாஜினியே.

கரிபால்டி கையில் கத்தி ஏந்தி இத்தாலியின் சுதந்திர யுத்தத்தைத் தலைமை வகித்து நடத்தியவர்.

மாஜினி, கரிபால்டி இவ்விருவருடைய முயற்சியும் வெற்றி பெறவும் சுதந்திர இத்தாலி உருவாகவும் இடைவிடாது தொண்டு புரிந்த சிறந்த இத்தாலிய ராஜதந்திரிதான் காவூர். அதாவது மாஜினியும் கரிபால்டியும் இத்தாலியின் அடிமைத் தளைகளைத் தகர்த்து எறிந்தனர். காவூர் ஆக்க வேலைகளில் ஊக்கம் காட்டி இத்தாலியை உருவாக்கினார்.

அன்னியர் ஆதிக்கத்திலிருந்து இத்தாலியின் வீர சுதந்திரப் போராட்டம் 1870-ம் ஆண்டு வெற்றிகரமாக முடிவடைந்தது. எனினும் அத்துடன் இத்தாலி சமாளிக்க வேண்டிய பிரச்னைகள் தீர்ந்து விடவில்லை.

"இத்தாலியை உத்தாரணம் செய்து விட்டோம். ஆனால் இனி இத்தாலியர்களை உத்தாரணம் செய்ய வேண்டுமே" என்று ஒரு இத்தாலியத் தலைவர் கலங்கினார். மகத்தான கஷ்ட நஷ்டங்களுக்குப் பின் இத்தாலி சுதந்திரம் பெற்றது. ஆனால் சுதந்திரம் பெற்ற பின் அந்த நாட்டில் உள் நாட்டு அபிப்பிராய பேதங்கள் குமுறத் தொடங்கின.

## செய்தது என்ன?




அப்பா சாஸ்திரிகள்:—குப்பா சாஸ்திரிகளே! இங்கிலீஷ்காரன் இந்தியாவுக்கு வந்து என்னத்தைப் புரட்டி விட்டான்? அவன் வந்தபோது இங்கே எல்லாருடைய தலையிலும் குடுமி இருந்தது; இப்போது எல்லாம் 'க்ராப்பா' யிருக்கிறது!

## கருமேகங்கள் விலகின

சிக்கார் கட்சி, போப் கட்சி என்ற பேதங்கள் இத்தாலியின் முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையாக அமைந்தன. ரோம் நகரிலே ஆயிரம் வருஷ காலம் ஏக சக்ராதிபத்தியம் செலுத்தி வந்த மதகுருக்களான போப் வர்க்கத்தினர் தங்களுடைய அதிகாரத்துக்கு ஆபத்து ஏற்படுவதைக் கண்டு ஆத்திரம் கொண்டனர். எனினும் மேற்படி நகரத்தை இத்தாலிய சர்க்கார் விட்டுக் கொடுத்து வெகு திறமையுடன் சமாளித்தார்கள். சுதந்திர நாட்டில் சுதந்திர மத ஸ்தாபனத்துக்கு இடம் உண்டு என்றனர் இத்தாலியத் தலைவர்கள். மத விஷயங்களில் போப்புக்கு விசேஷ அதிகாரங்கள் அளிக்கப்பட்டன. அவ்வாறாக போப் கட்சியின் எதிர்ப்பு அடங்கி அமைதி ஏற்பட வழி உண்டாயிற்று.



கரிபால்டி

பொருளாதாரத் துறையிலும் சுதந்திர இத்தாலிய சர்க்கார் பல கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அக்காலத்தில் இத்தாலி விவசாயத்திலும் கைத்தொழிலிலும் மிகவும் பிற்போக்காக இருந்தது. தேசத்தின் புனருத்தாரணத்துக்குப் போதிய பணம் இல்லை. இத்தாலி ஜனங்களோ பரம ஏழைகளாக இருந்தனர். கடன் பளுவும் சர்க்காரின் கழுத்தை நெறித்துக் கொண்டிருந்தது. பஞ்சம் போதாதென்று பிணியும் பரந்த முறையில் ஜனங்களை வாட்டியது. இவையெல்லாம் ஒருபுறமிருக்க, இயற்கையும் இத்தாலியை இரக்கமின்றி இடித்து வந்தது. அதாவது இத்தாலி அடிக்கடி பூகம்பங்களுக்கும் எரிமலை விபத்துகளுக்கும் இலக்காகியது. பசியும் பிணியும் இயற்கை விபத்துகளும் அதிகமாகவே இத்தாலி முழுதும் உள்நாட்டுக் கலகங்கள் பீறிட்டுக் கொண்டு கிளம்பின. அவைகளை "ரொட்டிக் கலகங்கள்" என்று சரித்திரம் கூறுகிறது. அதாவது பசி தாங்க முடியாத ஒரே காரணத்தால் ஜனங்கள் கொதித்து எழுந்தனர். அவ்வமயம் இத்தாலியின் மன்னராக இருந்த ஹம்பர்ட் பட்டினி கிடந்த ஜனங்களின் ஆத்திரம் காரணமாகக் கொலையுண்டார். அவருக்குப் பிறகு மூன்றும் விக்டர் இமான்யுவல் பட்டத்துக்கு வந்தபிறகுதான் இத்தாலியைச் சூழ்ந்திருந்த கருமேகங்கள் விலகிச் சுபிட்ச சூரியன் உதயமானான். (தொடரும்)

# கொலம்பியா இசைத் தட்டுகள்

ஸ்ரீ தியாகராஜ கீர்த்தனங்கள் அமரத்வம் வாய்ந்தவை என்பதற்கு அத்தாட்சிகள் பல உண்டு. அவற்றில் ஒன்று, பழைய கீர்த்தனங்கள் எப்படிச் சிலகாலம் அக்ஞாதவாசம் செய்துவிட்டு, மறுபடியும் புத்துயிர் பெற்று ஒளிர்கின்றன என்பதாகும். "ஸாரஸ ஸாம தான" என்ற காபி நாராயணி கீர்த்தனம் வெகு காலத்துக்கு முன்பு பாடத் தெரிந்த ஒவ்வொருவர் நாவிலும் குடிகொண்டிருந்தது. சிலகாலம் அக்ஞாதவாசம் செய்தது. இப்போது மீண்டும் பிரபலமடைந்து வருகிறது. கான கலாதர மணி ஐயர் அதை இசைத் தட்டில் 'டாண் டாண்' என்று அடித்துப் பாடியும், இசையோடு குழைத்துப் பாடியும், பிரகாசிக்கும்படி செய்திருக்கிறார். இசைத்தட்டு நம்பர் ஜி. இ. 6462.

காந்தி மகாத்மாவின் பிரிவைக் குறித்து இரங்கிப் புலம்பும் இசைத்தட்டு—மாலையில் தேசியப் பற்றுடைய ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்களின் ஜி. இ. 6520 இசைத் தட்டு உருக்கமாக அமைந்திருக்கிறது. காந்திஜியின் பரம பக்தர்களில் ஒருவரான ராய. சொ. அவர்களின் விருத்தப்பா "காந்திஜியின் அன்பு தவழும் முகம் எங்கே? அருள் சுரக்கும் விழி எங்கே?" என்று கதறுவதைக் கேட்ப, ஸ்ரீமதி சுந்தராம்பாள் உள்ளம் பதறிப் பாடியிருக்கிறார். நாமக்கல் கவிஞரின் "உத்தமராம் காந்தியை" என்னும் பாடல் இன்னொரு பக்கத்தில் இடம் பெற்றிருக்கிறது.

ஸ்ரீமதி பழனி ஆர். பாகீரதி ஜி. இ. 6508 இசைத் தட்டில் ஒருபக்கம் உசைந்ராவில் "பராமுகம் தகாதையா" என்று பாடியிருக்கிறார். இன்னொரு பக்கத்தில் வசந்து பைரவியைக் கையாண்டிருக்கிறார். ஸ்ரீமதி பாகீரதியின் குரல் கணீரென்று ஒலிக்கிறது. தொடர்ந்து வரும் இசைத் தட்டுகளின் மூலம் இவருடைய புகழ் நன்கு வளருமென்று எதிர்பார்க்கிறோம்.



# உத்தியோக லக்ஷணம்

எஸ்.வி.எஸ்.

குலசேகரன் ஒரு மாதிரியான குஷிப் பேர்வழி. அவன் வாழ்க்கையில் 'பெரிசாக' எதையும் மதிப்பது கிடையாது.

இன்றைக்கு ஒரு உத்தியோகத்திலிருப்பான், நாளைக்கு இன்னொரு உத்தியோகத்திலிருப்பான். இன்றைக்குச் செட்டியார் கடையில் கணக்கெழுதிக் கொண்டிருப்பான் நாளைக்கு ஒரு பெரிய கம்பெனியின் மானேஜராக இருப்பான். மூன்றாவது நாள் கடைக்குக் கடை பாக்குப் பொட்டலங்கள் போடும் ஏதாவது ஒரு பாக்குத்தூள் கம்பெனியின் ஏஜெண்டாக இருப்பான்.

இப்படியொரு அநித்தியமான வாழ்க்கை வாழும் குலசேகரன், யார் செய்த புண்ணியத்தினாலோ தம்பிகா மில்லில் மூன்று வருஷம் சேர்ந்தாற்போல் டைபிஸ்டாக வேலை செய்து, அந்த மில்லின் முதலாளி கங்காதர நாயுடுவின் பெரு மதிப்பிற்குப் பாத்திரமானான். அதனால், எல்லாருக்கும் இரண்டு மாச போனஸ் கொடுத்தால் குலசேகரனுக்கு, முதலாளி கங்காதர நாயுடு, இரகசியமாக இன்னும் மூன்று மாத போனஸ் கொடுப்பார். பின், குலசேகரன் மூன்று வருஷம் அங்கு இருந்ததில் அதிசயம் என்ன இருக்கிறது?

ஆனால் சென்ற மூன்று மாதமாக குலசேகரன் மனசு சரியாக இல்லை. 'உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டு, துண்டைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு போய்விடலாமா' என்று சிந்திக்கத் தலைப்பட்டான். இதற்குக் காரணம் மில்லின் மானேஜர் சங்கரன் பிள்ளை தான்.

இத்தனை நாள் குலசேகரன் மில்-ஆபீசுக்கு எட்டு மணிக்கு வந்தாலும் சரி, பதினொரு மணிக்கு வந்தாலும் சரி, கேட்பார் யாரும் கிடையாது. ஆனால் இப்பொழுதெல்லாம் எட்டு மணிக்கு வந்தால், "இவ்வளவு சீக்கிரம் இங்கு யார் உன்னை வரச் சொன்னது?" என்று மானேஜர் சங்கரன் பிள்ளை கேட்க ஆரம்பித்தார். பதினொரு மணிக்கு எப்பொழுதும்போல் போனால் "மிஸ்டர்! ஆபீசு பத்து மணிக்கு ஆரம்பமாகிறது. இப்போது மணி என்ன தெரியுமா?" என்று சங்கரன் பிள்ளை கேட்க ஆரம்பித்து விட்டார்.

குலசேகரன் கடிதங்களை டைப் அடித்துக் கொண்டுவந்து கையெழுத்துக்காகச் சங்கரன் பிள்ளை மேஜையில் வைப்பான். அதில் ஏதாகிலும் ஒரு தவறு இருந்தால், முன்பெல்லாம் சங்கரன் பிள்ளை தாமே திருத்திவிட்டுக் கையெழுத்துப் போடுவார். ஆனால் இப்பொழுது ஒரு சிறு தவறிருந்தாலும் "குலசேகரன்! நீங்க 'டைப்' அடிக்கும்போது, தூங்கி விடுவீர்களா? இதென்ன ஒரே தப்பாக இருக்கிறதே!" என்று எரிந்துவிழ ஆரம்பித்துவிட்டார்.

மானேஜரின் இந்தப் புதுப்போக்கு குலசேகரனுக்கு அர்த்தமாகவே இல்லை. நேற்றுவரையிலும், 'குலசேகரன் முதலாளியின் தத்துப்புத்திரன்; அவன் வியவகாரத்தில் தலையிடக் கூடாது' என்று எண்ணியிருந்த சங்கரன்பிள்ளை, இப்போது இப்படிப் பேச ஆரம்பித்தால் குலசேகரன் என்ன பண்ணுவான்?

நேரே முதலாளி கங்காதர நாயுடு வீட்டுக்குப் போனான். "ஸார்! மானேஜர் இப்போதெல்லாம் நம்ம வியவகாரத்தில் புகுந்து, ரொம்ப சிரமப் படுத்துகிறார். அவர் எடுத்ததற்கெல்லாம் குற்றம் குறை சொல்லுகிறார். பொறுக்க முடியவில்லை!" என்றான்.

கங்காதர நாயுடு "குலசேகரா! ரொம்பப் பதறாதே. மானேஜர் தப்பு இருந்தால் தான் ஏதாகிலும் சொல்லுவார். நீ அவரோடு ஒத்துத்தான் போக வேணும்" என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

"என்ன? நான் அவரோடு ஒத்துத்தான் போக வேணுமா?" என்றான்.

"ஆமாம்" என்றார் சங்கர நாராயணு.

விஷயம் ரொம்பவும் முற்றி விட்டது என்று எண்ணினான் குலசேகரன்.

அன்று எப்பொழுதும் போல் ஆபீசுக்குப் போனான் குலசேகரன். போனதும் போகாததுமாக மானேஜர் சங்கரன் பிள்ளை அவனைக் கூப்பிட்டு எதற்கோ வைதார்.



"ஸார்! ஏன் என்னை இப்படி வைகிறீர்கள். என்னைக் கண்டால் உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் சொல்லி விடுங்களேன்! நானே போகிறேன்... இதோ இந்த நிமிஷம் பொறுத்திருங்கள். ராஜிநாமாக் கடிதாசி டைப் அடித்துக்கொண்டு வந்து கொடுத்துவிடுகிறேன். நானும் ஒரு வருஷத்துக்குமேல் எங்கேயும் வேலை செய்ததில்லை என்று வைத்திருந்தேன். இங்கே தான் எப்படியோ தப்பித் தவறி மூன்று வருஷம் இருந்துவிட்டேன். இது ஆண்டவனுக்கே பொறுக்கவில்லை போலிருக்கிறது" என்று சொல்லி விட்டுத் தன் நாற்காலிக்குப் போனான். ராஜிநாமாக் கடிதாசியை டைப் அடித்துக் கொண்டுபோய்ச் சங்கரன் பிள்ளையிடம் கொடுத்துவிட்டான். மானேஜர் சங்கரன் பிள்ளைக்கு ஒன்றும் புரியவில்லை. சித்தப் பிரமை பிடித்தவர் போல் உட்கார்ந்திருந்தார்.

* * *

குலசேகரன், தம்பிகா மில்லில் தான் பார்த்துவந்த வேலையை ராஜிநாமாச்செய்த அன்று இரவு முழுவதும் 'இனி என்ன செய்வது' என்று யோசிக்க ஆரம்பித்தான். நாலு மாதம் தன் அறையில் உட்கார்ந்து கவலையில்லாமல் சாப்பிடுவதற்கு வேண்டிய பணம் கையிலிருந்தது. ஆனால் குலசேகரன் சுபாவத்திலேயே சுறு சுறுப்பான பேர் வழியாதலால் பணத்தைச் சுறு சுறுப்பாகச் செலவு செய்தால்தான் அவனுக்குத்திருப்தி. கையிலிருக்கும் பணத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்து சாப்பிடப் பிடிக்கவில்லை. அதற்குப் பதில் கையிலிருக்கும் பணத்தை வைத்துக்கொண்டு ஏதாவதும் 'பிஸினஸ்' (வியாபாரம்) செய்து பிழைக்க வேண்டும் என்று நினைத்தான்.

என்ன வெல்லாமோ 'பிஸினஸ்'களைப் பற்றி நினைத்தான். ஒன்றுக்குத் தன் கையிலிருந்த பணம் போதாது என்று தோன்றினால் இன்னொன்றுக்குத் தன் கையிலிருக்கும் பணம் அதிகமாகத் தோன்றியது. கடைசியில் தன் கையிலிருக்கும் பணத்துக்குத் 'தோதா'ன பிஸினஸ் பத்திரிகை பிஸினஸ் தான் என்று நினைத்தான். பத்திரிகை பிரசுரிக்கும் 'பிஸினஸ்' அல்ல; பத்திரிகை விற்கும் 'பிஸினஸ்'ஸில் குலசேகரன் ஈடுபடத் தீர்மானித்தான்.

முதலில் பிரபல தினப் பத்திரிகைகளையும் வாரப் பத்திரிகைகளையும் விற்கும் ஏஜென்ஸி எடுத்துக்கொள்ளக் குலசேகரன் முயற்சி செய்தான். அவர்கள் அவனுக்கு ஏஜென்ஸி கொடுக்க இயலாமைக்கு வருத்தம் தெரிவித்து எழுதவே, 'இவர்கள் என்ன எனக்கு வருந்துவது? இந்தப் பத்திரிகைகள் விட்டால் உலகில் பத்திரிகைகளே இல்லாமற் போய்விட்டதா' என்று சொல்லிக் கொண்டு அன்றுடம் புதிது புதிதாகக் கிளம்பும் சில பத்திரிகைகளை வரவழைத்து ஒரு கடை பரப்பினான். அவைகளில் ஒன்றிரண்டு விற்றன. சில விற்கப்படாமல் கட்டுக் கட்டாகக் கடையி லிருந்தன.

"என்ன இந்த ஊரில் பத்திரிகை வாங்கிப் படிக்கும் ஜனங்களே இல்லாமலா போய் விட்டார்கள்? படிக்கும் ஜனங்கள் இல்லாவிட்டால் என்ன? நான் எங்கே போய் விட்டேன்?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். இத்தனை நாளும் பத்திரிகைப் படித்தறியாத குலசேகரன் அங்கே கிடந்த ஒரு தினப் பத்திரிகையை யெடுத்துப் படிக்க ஆரம்பித்தான்.

தேவை

ஒரு நிமிஷத்துக்கு நூற்றிருபது வார்த்தைகள் சுருக்கெழுத்தில் எழுதக் கூடியவரும், அறுபது வார்த்தைகள் டைப் அடிக்கக் கூடியவருமான ஒரு குமாஸ்தா நல்ல 'எதிர் காலம்' இருக்கும் புதுக் கம்பெனிக்குத் தேவை. முன் அநுபவமுள்ளவர்கள் பெரிதும் விரும்பப்படுவார்கள். தபால்பெட்டி நெ. 186

இந்த விளம்பரத்தைப் பார்த்ததும் குலசேகரனுக்கு 'நாம் ஏன் விண்ணப்பம்

போடக்கூடாது' என்று தோன்றியது. தோன்றிய க்ஷணமே விண்ணப்பம் எழுதி அனுப்பி விட்டான்.

நாலு நாள் கழித்து அவனுக்குப் பின் வருமாறு பதில் வந்தது.

ஷங்கர்லால் அண்டு கம்பெனி
ஷேர் புரோக்கர்கள்

ஐயா,

தாங்கள் 8—2—47 காலை பதினொரு மணிக்கு எங்கள் காரியாலயத்துக்கு நேரில் வரவும்.

இப்படிக்கு,

கே. எஸ். பிள்ளை (மானேஜர்)

குலசேகரன் கடிதத்தில் கண்டபடி 8—2—47 அன்று காலை ஷங்கர்லால் கம்பெனிக்குச் சென்றான். மானேஜர் என்று போர்டு தொங்கவிடப் பட்டிருந்த அறைக்குள் நுழைந்தான். அவனுக்குத் தலை சுழன்றது. கண்கள் இருண்டு வந்தன. காரணம் மானேஜர் நாற்காலியில் சங்கரன் பிள்ளை உட்கார்ந்திருந்தது தான்!

"குலசேகரா! ஒன்றும் யோசிக்காதே! உள்ளே வா. இதுவரை நான் உன்னைக் காணாமல் தான் தவியாய்த் தவித்தேன். முன்னைப் போல் உன்னிடம் கடுமையாக நடந்து கொள்ள மாட்டேன். நான் அப்படி உன்னிடம் நடந்து கொண்டதற்குக் காரணமே அந்த கங்காதர நாயுடு தான்."

"கங்காதர நாயுடு தானா?"

"அவர் தான் உன்னிடம் கடுமையாக நடந்து கொள்ளச் சொன்னார். நிறையவும் வேலை வாங்கச் சொன்னார். அவரால் உன்னைக் கண்டிக்க முடியவில்லையாம், அதனால் என்னைக் கண்டிக்கச் சொன்னார். கடைசியில் நீ என் மேல் கோபித்துக் கொண்டு ராஜினாமா செய்து விட்டாயா? அது எனக்கு ரொம்பவும் மனவருத்தத்தை அளித்தது. நாயுடுவிடம் போய் மறுபடியும் உன்னை வேலையில் வைத்துக் கொள்ளச் சொன்னேன். 'அவர் ராஜினாமா செய்து விட்டுப் போனவர்களை மறுபடியும் வேலையில் வைத்துக் கொள்ளக் கூடாது' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். என்னைப் பற்றித் தவறாக நினைத்துக் கொண்டு குலசேகரன் ராஜினாமா செய்து விட்டானே, அதனாலேயாவது......' என்றேன்.

"'நீங்கள் தவறாக அவனிடம் நடந்து கொண்டிருப்பீர்கள்; அவனும் தவறாக நினைத்துக் கொண்டிருப்பான்' என்றார். எனக்குக் கோபம் கோபமாக வந்தது. என்னைக் கண்டிக்கச் சொல்லி விட்டு, தாம் நல்ல பெயர் சம்பாதிக்கும் கபட வஞ்சகரிடம் வேலை செய்வதை விட வேலை செய்யாமலிருப்பதே மேல் என்று தோன்றியது. ஆகவே, நானும் உடனே ராஜினாமா செய்து விட்டேன். அதற்கு 'அவர் ரொம்ப சந்தோஷம்' என்றாரே பார்க்க வேண்டும். பிறகு நான் தனியாக வந்து என் பெயரிலேயே 'ஷங்கர்லால்' என்று இந்தப் பங்கு மார்க்கெட் பிஸினஸ் ஆரம்பித்தேன்.

"இந்த பிஸினஸுக்கெல்லாம் உன்னைப் போன்ற சுறுசுறுப்பான ஆட்கள் தான் தேவை. அதுவும் நீ தான் வேண்டும் என்று வெகு நாட்களாகத் தேடிக் கொண்டிருந்தேன். இந்தக் கதையெல்லாம் சொல்ல வேண்டும், என் மேல் யாதொரு தவறும் கிடையாது என்று உன்னிடம் சொல்ல வேண்டும் என்றிருந்தேன். இன்றைக்கு நீ வந்ததில் எவ்வளவோ திருப்தி. இங்கேயே நீ இரு. நீ கேட்கிற சம்பளம் தருகிறேன்" என்றார் சங்கரன் பிள்ளை.

'கங்காதர நாயுடு தன்னிடம் இவ்வளவு அன்பாக நடந்து கொண்டு விட்டுக் கடையில் இப்படியா செய்தார்' என்று குலசேகரன் வியந்து கொண்டிருந்தான். அடுத்த கணம் சங்கரன் பிள்ளையிடம் வேலை பார்க்கப் பரம திருப்தியுடன் ஒப்புக் கொண்டான்.

• • •

மூன்று நாட்கள் கழித்து, ஒரு நாள் குலசேகரன் ஆபீசுக்குப் போனபோது, மானேஜர் சங்கரன் பிள்ளையின் அறையிலிருந்து பழகிய குரல் ஒன்று கேட்டது.

"நான் கூட உங்கள் பிஸினஸில் சேர்ந்து கொள்ளலாம் என்று நினைக்கிறேன். நம்ம பிஸினஸ் 'டல்'லாகப் போய் விட்டது; அதனால்தான் அந்த ராஜினாமாவெல்லாம் அங்கீகரித்து அதை மூடி விட்டேன். உங்களுடன் குலசேகரன் சேர்ந்திருப்பதாகக் கேள்விப் பட்டேன். அப்படியானால் உங்கள் 'பிஸினஸ்' கட்டாயம் வெற்றியடையும். என்னையும் உங்களுடன் சேர்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறியது அந்தப் பழகிய குரல்.

குலசேகரன் தன்னைப்பற்றி யாரோ பேசுகிறார்களே, அவர் யார் என்று பார்க்க ஆவலுடன் எட்டிப் பார்த்தான் — கங்காதர நாயுடு அங்கே உட்கார்ந்திருந்தார்!

# வட்ட மேஜை

தியாகராயநகர்
7—8—48

## பட்டமளிப்பு உடை

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

சென்னைச் சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு வைபவங்களில் மாணவர்களுக்கென்று உடை விஷயத்தில் ஒரு கண்டிப்பான நியதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஒன்று, முழுக்க முழுக்க ஆங்கிலேய ரீதியிலாவது. அன்றி பஞ்சகச்சம், கழுத்துவரைப் பொத்தான் வைத்த கோட், தலைப்பாகை (டர்பன்) அணிந்தாவது வர வேண்டுமென்று விதித்திருக்கிறார்கள். அத்துடன் வௌவால் தோற்றத்தை அளிக்கும் கறுப்புக் கவுனையும், கறுப்பு குல்லாவையும் அணிய வேண்டுமென்று தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

ஒரு வைபவத்தின் கம்பீரத்திற்காக உடையின் ஒரு ஒழுங்கு அவசியமே யாயினும் மேற்கண்ட உடை தீர்மானத்தின் பிரதிகூலங்கள் பல.

(1) படிப்பதற்கே பணம் ஏராளமாகக் கடன் வாங்கி உழன்ற ஏழை மாணவர்கள் இந்த ஒரு நாள் கூத்துக்காக ஸூட், பூட், டை இவைகளுக்கு அல்லல்படுவது பரிதாபகரமான காட்சி. மேலும் கவுன், குல்லாவுக்கு வாடகை வேறு.

(2) கட்டுக் குடுமி வைத்துக்கொண்டு இந்திய மதாசாரத்தைத் தைரியமாகப் பரிபாலித்து வரும் மாணவர்கள், இளைஞர்களாக இருப்பதால் பஞ்சகச்சம், தலைப்பாகை அணிய சங்கோசப் படுகிறார்கள். அந்தச் சங்கோஜமே அவர்களைப் பலபேர் நிறைந்த அந்தப் பேரவையில் உடல் குன்றி யிருக்கச் செய்து பட்டம் பெறுவதால் வரும் மகிழ்ச்சியை நாசம் செய்கிறது. போதாததற்கு, அவர்கள் இந்திய உடை அணிந்து பட்டம் பெறும்பொழுது ஆங்கிலேய உடை தரித்த மகான்கள் பூனை, நாய் மாதிரி ஊளையிட்டு அவர்களைக் கேவலப் படுத்துகிறார்கள்.

இவை யெல்லாம் ஒழிய, ஒரு துல்லிய வெண்மையான வேஷ்டியும் தூய சட்டையும் யாவருக்கும் உடையாக சுதந்திர இந்தியாவில் சர்வகலாசாலை அதிகாரிகள் ஏன் தீர்மானிக்கக் கூடாது?

ப. சீனிவாச ராகவன்.

மெய்ஞ்ஞானபுரம்
7—7—48

## காவல் பணம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

எங்கள் கிராமத்தில் மறவர் என்றொரு ஜாதியார் வசிக்கின்றார்கள். தேவர்கள் என்று இவர்கள் அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் நூற்றுக்கு ஒன்று என்ற சதவிகிதத்தில் தான் இருப்பார்கள். ஆனால் மீதமுள்ள தொண்ணூற்றொன்பது சதவிகிதத்தினர் மீது தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தி வருகிறார்கள். ஊரில் பணக்காரர் என்று சொல்லப்படுவோரும் மறவர்களைத் தங்கள் வசம் வைத்துக் கொண்டு, தங்களை நியாயமான வழிகளில் எதிர்க்கும் நடுத்தர வகுப்பினரையும், எளியவர்களையும் அவர்களைக் கொண்டு ஒடுக்கி வருகிறார்கள்.

மறவர் என்று சொல்லப்பட்ட இந்த வகுப்பார் காவல் பணமும் வாங்கி வருகிறார்கள். எங்கள் வீடுகளிலும், சொத்துக்களிலும் களவு போகாமல் பாதுகாத்துத் தர வேண்டியது அவர்கள் பொறுப்பாம். அதற்கென்று வசூலிக்கப்படும் பணம் தான் காவல் பணமாகும். அவர்கள் தாங்களே, தங்கள் களவுத் தொழிலை நிறுத்தி விட்டால், எங்கள் வீடுகளிலோ, சொத்துக்களிலோ களவு போகாது என்பதை உறுதியாகச் சொல்ல முடியும்.

காவல் பணம் கொடுக்க மறுப்பவர்களின் வீடுகளில் பகிரங்கமாகவும், அதிகாரமாகவும் களவாடி வருகிறார்கள். இப்படிப்பட்ட மோசமான நிலையில் எங்கள் கிராமம் இருக்கிறது. இதற்கு வழி என்ன? சர்க்கார் இதைக் கவனிக்குமா?

எம். அருமைநாயகம்

சிங்கப்பூர்
31—7—48

## இவ்வளவு அசிரத்தையா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

தற்சமயம் சென்னைத் தபால் காரியாலயத்தில் மிகவும் தாமதமாகவே வேலைகள் நடைபெறுகின்றன என்று கருதுகிறேன்.

முக்கியமாகத் தபால்கள் எல்லாம் சரியாகவே வருகின்றன என்றாலும் பத்திரிகைகள் சரிவர மற்ற நாடுகளுக்குக் கிடைப்பதில்லை. மற்ற நாடுகளில் உள்ள இந்தியர்கள் பிரதானமாக இந்தியாவின் பத்திரிகைகளைப் படிப்பதற்கு மிகவும் ஆசையாய் இருக்கிறார்கள். ஆனால் பத்திரிகைகளோ இரண்டு மாதத்திற்குப் பிற்பாடுதான் கிடைக்கின்றன. அதாவது மே மாதப் பத்திரிகை ஜூலை மாதம்தான் கிடைக்கிறது. மற்ற நாடுகளின் தபால் காரியாலயங்கள் எல்லாம் துரிதமாகவேதான் நடைபெறுகின்றன. தாமதமாவது சென்னைத் தபால் காரியாலத்திலே யாகும்.

எப்படி யென்றால், சென்னையிலிருந்து கப்பல் புறப்பட்டால் ஐந்து தினங்களில் சிங்கப்பூர் வந்து சேர்ந்து விடுகிறது. ஆகவே அந்த தினத்திலிருந்து இரண்டு நாட்களில் சிங்கப்பூர் தபால் காரியாலயத்திலிருந்து தபால், பத்திரிகைகள் வெளியாக்கப்பட்டு விடுகின்றன. ஆகவே ஏழு தினங்களுக்குள் இவ்விடம் சரிவர வந்து விடுகின்றன. பாக்கியுள்ள ஒன்றரை மாதம் இந்தியாவிலே (சென்னையில்) தடைப்பட்டு நிற்கின்றன. இதற்குக் காரணம் சென்னைத் தபால் காரியாலயமேதான். சில சமயங்களில் மணியார்டர்கூடக் கிடைப்பதற்கு ஒரு மாதம் ஆகிறதாகக் கேள்விப்படுகிறேன்.

ஆகவே தபால்கள், பத்திரிகைகள் இதர நாடுகளுக்கு அனுப்புவதை வெகு சீக்கிரத்தில் உடனுக்குடன் பட்டுவாடா செய்ய சென்னைத் தபால் இலாகா சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

எஸ். டி. ரமணி

பட்டிவீரன்பட்டி
6—8—48

## குயவர் கஷ்டம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

"ஜாதி இல்லை, இல்லை" என்று கதறினார்கள்; ஆனால் பள்ளிக்கூடங்களில் இன்னும் ஜாதி பேதம் நீங்க வில்லையே! இன்னும் ஒரு ஏழைக் குயவன் அரைச் சம்பளம் கொடுத்துப் படிக்கலாம் என்பது சர்க்கார் சட்டம். அச்சட்டம் அதற்குரிய பாரங்களில் 'குயவன்' என்றும், 'குயவர்' என்றும் எழுதிப் பூர்த்தி செய்யக் கூடாதாம். 'குசவன்' என்றுதான் எழுத வேண்டுமாம். இது என்ன நியாயம்? 'குசவன்' என்ற பதத்தைக் 'குயவர்' என்று எழுதினால் என்ன? இச்சட்டமானது 'இன்னும் அடிமை தான்' என்று சொல்லுகிறது. சர்க்கார் உடனே "குசவன்" என்று இருப்பதைக் 'குயவர்' என்று மாற்றும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

எஸ். அழகர்சாமி

இலங்கை
2—8—48

## சொல்வது ஒன்று, செய்வது ஒன்று?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

இலங்கைப் பாராளுமன்றத்துச் சிங்கள மந்திரிகள் சிலர் தமிழர்களிடம், "நாங்கள் உங்கள் ஊழியர்கள். உங்கள் நலனுக்காக வேண்டுவன செய்வது எங்கள் கடமை. ஆகவே நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து தேசத்திற்காக உழைக்க வேண்டும். தமிழர், சிங்களவர் முஸ்லிம் என்ற பேதம் பாராட்டாமல் தேசப் பணி செய்ய ஒவ்வொருவரும் முன்வர வேண்டும்" என்று தேனும் பாலும் ஒழுகப் பொதுக் கூட்டங்களில் பேசித் தள்ளுவார்கள். ஆனால் அவர்கள் பேசிய தினத்தன்று வெளிவரும் அவர்களுடைய சொந்தப் பத்திரிகைகளில் சாதித் துவேஷக் கட்டுரைகள் வெளிவருதல் சகஜம்.

உதாரணமாக, ஒரு தமிழ் மக்களின் கூட்டத்தில் ஒரு சிங்கள மந்திரி மேற்கண்டவாறு பேசினார். ஆனால் அன்றைய தினத்தில் வெளிவந்த அவர் பத்திரிகையில் பின்வருமாறு ஒரு சிறு துவேஷக் கட்டுரை வெளியாயிற்று.

"தமிழர்களே! ஜாக்கிரதை. கதிர்காமக் கோயிலில் உங்களுக்கு உரிமையா வேண்டும்? எங்கள் சிங்கள மன்னரால் கட்டப்பட்ட கோயிலை நாங்கள்தான் இன்னும் பராமரித்து வருகிறோம். நீங்கள் ஒரு செப்புச் சதங்கூட இவ்வாலயத்திற்காகச் செலவிட வில்லை. ஆகவே கதிர்காமத்தில் ஒரு பிடி மண்ணையாவது எதிர்பார்த்து ஏமாறாதபடி உங்களை எச்சரிக்கிறோம்."

இதனால் இந்தியாவின் நல்லெண்ணத்தை இழந்து, இந்தியரின் விரோதத்தையும் சிங்களவர் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள்.

கு. த. மூர்த்தி.

பம்பாய்
5—8—48

## புகை விஷயம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

ஆகஸ்டு மாத முதல்வார 'கல்கி'யில் 'ஆனந்தம் அடைவார்கள்' என்று தலைப்புக் கொடுத்து எழுதியிருந்ததைப் பார்த்தேன். பம்பாயில் உண்மையாகவே சினிமா கொட்டகைக்குள் ஜனங்கள் ஆனந்தம் அடைகிறார்கள். ஆனால் நகருக்குள் ஓடும் டிராம் வண்டிகளிலும் ரயில் வண்டிகளிலும் மோட்டார் வண்டிகளிலும் பிரயாணம் செய்யும் ஜனங்கள் இன்னும் ஆனந்தம் அடைய முடியவில்லை. பொதுவாக வண்டிகளில் இடம் கிடைப்பதோ கஷ்டம். அதோடு விஷப்புகை போன்ற பீடி சிகரெட் புகை, பிரயாணிகளைத் மூச்சுத் திணறும்படிச் செய்து விடுகிறது. இதைத் தடுக்க பம்பாய் மாகாண சர்க்காருக்கு யோசனை இன்னும் உதயமாகாமல் இருக்கலாம். சென்னை சர்க்கார் கவனித்துச் சட்டமியற்றுமா?

ஜி. எஸ். மணி.

மாயவரம்
7—8—48

## ஸ்டேஷன் மாஸ்டர் துயரம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

மாயவரத்தில் 1-4-47ல் 'ஷண்டர்' கையெழுத்து வாங்கவில்லை என்று 21-வருஷம் 7 மாதம் சர்வீஸ் உள்ள என்னை ஸ்டேஷன் மாஸ்டர் வேலையிலிருந்து நீக்கியிருக்கிறார்கள். மேல் அதிகாரிகளுக்கு அப்பீல் செய்தும் அவர்கள் அதைக் கவனிக்கவில்லை. கடைசியாக ரெயில்வேட்ஸ் ஆணையை நேரில் போய்க் கேட்டும் ஒன்றும் சரியா சொல்லவில்லை. மேல் அதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் வரிசைக் கிரமமாக எழுதியும் ஒன்றும் பதில் இல்லை. இவர்கள் இவ்வாறு அசிரத்தை

## ஏணி எதற்கு?



கட்சிக்காரன்:—இதோ போறாருங்களே அவர் தான் என் வக்கீலுங்க; கீழ்க்கோர்ட்டிலே நம்ம கேஸ் தோத்துப் போச்சு; அதனாலே மேல் கோர்ட்டிலே போடறத்துக்குப் போறாருங்க.

வாய் ஏன் இருக்கிறீர்கள்? என்னை விசாரித்துச் சட்டப்படி குற்றமானால் அதற்குள்ள தண்டனையை எனக்கு அளிக்கட்டும் அல்லது வேறு ஏதாவது உத்தியோகம் கொடுக்கட்டும். அவ்வாறு இல்லாமல் 21 வருஷம் 7 மாதம் சர்வீஸ் ஆன என்னை வேலையை விட்டு நீக்குவதுதானா நியாயம்? எனக்கு மன்னிப்புக் கிடையாதா? வேலையை விட்டு ஓடிப்போன ஷண்டரை, மன்னிப்பளித்து வேலையில் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதுபோல் எனக்கில்லையா?

திருநெல்வேலி, கும்பகோணம், திருவாரூர் பாங்கிமலை, முதலிய ஸ்டேஷன்களில் ரயில் விபத்து நேரிட்ட ஸ்டேஷன் மாஸ்டர்களுக்கு மன்னிப்பளிக்கவில்லையா? எனக்கு மாத்திரம் ஏன் இந்த அநியாயம்?

வி. ராஜகோபாலன்.

பெரியகுளம்
6—8—48

## முதியோர் கல்வித் திட்டம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

நான் மதுரை போவதற்கு என் ஊர் பஸ் ஸ்டாண்டிற்குச் சென்றேன். அப்பொழுது ஸ்டாண்டில் மதுரை போகும் பஸ்ஸும் திண்டுக்கல் போகும் பஸ்ஸும் நின்று கொண்டிருந்தன. நான் மதுரைக்கு டிக்கட் வாங்கி மதுரை பஸ்ஸில் உட்கார்ந்திருந்தேன். திண்டுக்கல் பஸ்ஸிற்கும் டிக்கட் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். மதுரை பஸ் புறப்படும் நேரம் வந்து விட்டது. கண்டக்டர் பஸ்ஸில் டிக்கட் எண்ணினான். ஒரு டிக்கட் அதிகமாக இருந்தது. மறுபடி எண்ணினான். அப்பொழுதும் ஒரு டிக்கட் அதிகமாகத்தான் இருந்தது. 'யாராவது டிக்கட் வாங்காமல் ஏறி யிருக்கிறீர்களா?' என்று கத்தினான், பிரயோஜனமில்லை. எல்லோரும் டிக்கட் வாங்கி யிருந்தார்கள். மறுபடி எல்லோருடைய டிக்கட்டையும் வாங்கிப் பரிசோதித்து வந்தான். கடைசியில் ஒருவர் டிக்கட்டை வாங்கிப் பார்த்ததும் கண்டக்டருக்கு அந்த டிக்கட் வைத்திருந்தவர்மேல் கோபம் அளவுக்கு மீறி வந்து விட்டது. அவரைக் கண்டபடித் திட்டினான். ''ஏனய்யா, திண்டுக்கல் டிக்கட் வாங்கிக் கொண்டு வந்து மதுரை பஸ்ஸில் ஏறிக்கொண்டு எங்களைத் திண்டாட வைத்து விட்டாயே'' என்று திட்டினான். அப்பொழுது நான் அவரைப் பார்த்தேன். அவருக்குச் சுமார் 55 வயது இருக்குமென்றும், அவருக்குக் கல்வி தெரியாது என்றும், அவருடைய முக பாவனையிலிருந்து தெரிந்து கொண்டேன். உடனே அவரைக் கீழே இறக்கி விட்டு விட்டு பஸ் புறப்பட்டு விட்டது. பஸ் அப்பொழுது 10 நிமிஷம் தாமதமாகவே புறப்பட்டது. இதற்கெல்லாம் காரணம் கல்வி இல்லாததுதான். அதனால் முதியோர்களின் கல்வித் திட்டத்தை நமது சர்க்கார் அதிசீக்கிரத்தில் முன்னேற்றமடையச் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

என். ரத்தினம்.




வேலை நிறுத்தங்களையும், அரசாங்க ஊழியர்கள் கூட்டமாக நடவடிக்கை எடுப்பதையும் தடை செய்து ஜப்பானிய சர்க்கார் உத்தரவு ஒன்றைப் பிறப்பித்துள்ளனர்.

—டோக்கியோ செய்தி.

இந்த உத்தரவை எதிர்த்து அரசாங்க ஊழியர்களும், மற்ற தொழிலாளிகளும் வேலை நிறுத்தம் செய்தாலும் செய்யலாம்.

★

புதிதாக அமெரிக்க விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ள அணுகுண்டு சாதாரண அணு குண்டைப்போல் ஆயிரம் மடங்கு சக்தி வாய்ந்தது.

நியூயார்க் செய்தி.

அடிக்கடி அணுகுண்டு பற்றி 'அணு குண்டு' விடாவிட்டால் அமெரிக்க விஞ்ஞானிகளுக்குத் தூக்கமே வராதுபோலும்!

சமாதானப் பிரியர்போல் நிஜாம் நடிக்கிறார். —பத்திரிகைத் தலைப்பு.

இனிமேலாவது ஏதாவது ஒரு 'சான்ஸ்' கிடைக்கும் என்ற எண்ணம் நிஜாமுக்கு இருக்குமோ, என்னவோ?

★

பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரம் இன்னும் நானூறு ஆண்டுகளில் விழுந்து விடும் என ஒரு நிபுணர் கூறுகிறார்.

—லண்டன் செய்தி.

மேற்படி நிபுணர் விழுந்து விழுந்து ஆராய்ச்சி செய்திருப்பார் போலும்.

★

நேரு பிரசங்கம் செய்யவிருந்த கூட்டத்தில் ஆக்ஷேபகரமான பிரசுரங்களை விநியோகித்த நால்வர் கைது செய்யப்பட்டனர். —சென்னைச் செய்தி.

நேருவின் பிரசங்கத்தின்போது இந்த அதிகப்பிரசங்கித் தனத்தை யாரால்தான் சகித்துக் கொண்டிருக்க முடியும்.

---

★ இந்த இதழில் வெளியாகியிருக்கும் வட்ட மேஜைக் கடிதங்களில் தியாகராய நகர் ப. சீனிவாச ராகவன் அவர்கள் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.




# ஓரியண்ட்

## சிகரெட்




பாகெட் -
4 அணா.
டின் - 1-4-0
வரி அலாதி

நேஷனல் டொபாகோ கம்பெனி ஆப் இந்தியா, லிமிடெட்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# கல்கி



KALKI ஆகஸ்டு 22, 1948 4 அணா

REGD. NO. M. 4392

கண்டு அருவையும் ஆத்திரமுங்கொண்டு அதற்கு எதிராகக் கிளம்பியது.

அன்னியத் துருப்புகள் அணி அணியாக வந்ததைக் கண்டு பிரஞ்சு மக்கள் கலங்கவில்லை. தங்களுடைய வறுமையைக் கூடப் பொருட்படுத்தாமல் உற்சாகத்துடன் போர்க்களத்தில் பாய்ந்தனர். அதற்கு முன் வழக்கத்திலிருந்த வாழ்க மன்னர் என்ற கானம் மறைந்து வாழ்க சுதந்திரம் என்ற கானமே பிரான்ஸ் தேசம் முழுதும் ஒலித்தது!



பாஸ்டில் சிறை தகர்க்கப்பட்டது

அந்தச் சமயம் குடியரசுப் பிரான்ஸை எதிர்த்து முடியரசுப் பிரிட்டன் கோர யுத்தம் புரிந்தது. அதே சமயம் உள்நாட்டுப் போரும் ஏற்பட்டது. இரண்டு யுத்தங்களிலும் பலியான பிரஞ்சு ஜனங்களின் தொகை எண்ணில் அடங்காது. உள்நாட்டு யுத்தத்தில் கலந்து கொண்ட ஏராளமான தலைவர்களும் ஜனங்களும் தூக்கு மேடையில் மாண்டனர். அவர்களை யெல்லாம் தூக்கு மேடைக்கு அனுப்பிய தலைவர் ரோபஸ்பியரும் இறுதியில் அதே தூக்கு மேடைக்குப் பலியானார்!

ரோபஸ்பியருக்கு கைதுணையாக இருந்து சுதந்திர பேரிகை முழக்கிய டேண்டன் போன்ற சகாக்களைக் கூட ரோபஸ்பியர் தூக்கு மேடைக்கு அனுப்பத் தயங்கவில்லை. ஆனால் எந்த ரோபஸ்பியரின் தலைமையில் பிரஞ்சு ஜன மகா சபை பிரஞ்சுக் குடியரசுப் பிரகடனம் செய்ததோ, அதே சபைதான் இறுதியில் ரோபஸ்பியரின் சர்வாதிகாரத்தைக் கண்டித்து அவரைத் தூக்கு மேடைக்கு அனுப்பியது'

உள்நாட்டு யுத்தம் காரணமாக பிரஞ்சு மக்களின் உயர்ந்த கொள்கைகளும் எதிர்காலத்தைப் பற்றிய கனவும் தவிடுபொடியாயின. எனினும் பெற்ற சுதந்திரத்தை எந்தச் சக்தியும் அபகரிக்க முடியாது என்ற எண்ணம் அவர்களுக்கு ஆறுதல் அளித்தது.

ரோபஸ்பியரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி பிரஞ்சு ஜனங்களின் தலைவராக விளங்கிய நெப்போலியன் போனபார்ட் பிறகு தன்னைத்தானே பிரான்ஸின் சக்கரவர்த்தியாக்கிக் கொண்டதும், அதிகாரவெறியையும் மண்ணாசையையும் அடிப்படையாகக் கொண்ட பல்வேறு யுத்தங்களிலும் அபார வெற்றி பெற்று இறுதியில் பிரிட்டிஷாரிடம் கைதியாகி மாண்டதும் சரித்திரத்தில் மறக்க முடியாத படலங்களாகும்.

## 4. நெதர்லண்ட்ஸ்

பல நூற்றாண்டுகள் அடிமைப் பட்டுக் கிடந்த பிரிட்டன் பிற்காலத்தில் பல நாடுகளையும் அடிமைப் படுத்தத் தயங்கவில்லை. சுதந்திரம் என்ற மந்திரத்தை உலக நாடுகளுக்கு உபதேசம் செய்ததாகச் சரித்திராசிரியர்களால் போற்றப்படும் பிரான்ஸின் இன்றைய போக்கைப் பற்றி எதுவுமே சொல்வதற்கில்லை. அதுபோலவே சுதந்திரம் பெறுவதற்காகச் சரித்திரத்திலே ஈடு இணையற்றபோரை நடத்திய நெதர்லண்ட்ஸ் தேசம் தான் இன்று இந்தோனேஷியாவின் சுதந்திரத்தை அபகரிக்கும் எமனாக வாய்த்திருக்கிறது! நெதர்லண்ட்ஸ் ஒரு காலத்தில் ஸ்பெயினிடம் அடிமைப்பட்டுக் கிடந்தது. நெதர்லண்ட்ஸ் ஜனங்களையே துடைத்து ஒழித்து விடுவதற்காக ஸ்பெயின் செய்த சூழ்ச்சியின் கொடுமைக்குச் சரித்திரத்திலே உவமை காண்பதரிது.



வில்லியம் ஆரேஞ்ச்

ஸ்பெயின் மகத்தான ராணுவ பலத்துடனும் செல்வாக்குடனும் விளங்கிய அக்காலத்தில், நெதர்லண்ட்ஸ் தேச மக்கள் ராணுவ பலம் எதுவுமின்றிச் சாதாரண வியாபாரிகளாகக் காலம் கடத்தி வந்தனர். எனவே அவர்கள் ஸ்பெயினை எதிர்த்து நின்று போர் புரிந்து சுதந்திரம் பெறுவதென்ற பேச்சே எழுவதற்கு இடமில்லை.